ஸ்ரீபிரேமபுரீசர்.





ஸ்ரீசௌந்திரவல்லிநாயகி.

உ

சிவமயம்.

# முகவுரை.

தி[illegible]ந்திக்கமலத்துதித்த பிதாமகராகிய பிர்ம தேவரால் பூ[illegible]னந்தவனமாகியகாசி, ஸ்ரீபிரேமபுரியென்னும் இ[illegible]ண்டுள்[illegible]ருமே எழுவிதமான ஜன்மக்கடலிற்[illegible]ந்தலை[illegible]ன்[illegible]டிகளும், பவஸாகரத்தைக் க[illegible] கா[illegible]ய மோக்ஷத்திற்கு அங்குரமாவ[illegible]ன்று கூறி[illegible]த்தலின், தென்றிசைக்கோன் நமது வா[illegible]கோத் தினமணியென்னும் படியினல் அளந்திண்டு வி[illegible] செல்லுதல் கருதி நாமும் வண்ணம் முற்கூறிய தட்சணகாசியாகிய அன்பிலாலந்துறையென்னும் பிரேமபுரி ஸ்தலமான்மியந்தை ஆரியதமாகிய வடமொழிக்கண்ணின்று மற்றைய யாவர்களும் உணர்ந்துய்யும்படிக்கு நாடகத்தமிழ்ப்பாவாகக் கைம்மாறினறிப் பொழியும் மைம்மாரிபோலே, திருசயம் பிர்மஸ்ரீ அப்பாவையரென்றருள்வாக்கை அடைந்த கிருஷ்ணபாரதி அவர்களியற்றி அருளினர்.

இப்பால் சிவபக்தியிற் சிறந்த அத்தலவடியார்களும் திருவையாறென்னும் திருவாதி மகாா-ா-ஸ்ரீ வெங்கிட்டராமய்யாவர்களும் விரும்பிக்கேட்டுக்கொண்டவாறே அம்மான்மியத்தை எச்சாதியார்களும் எளிதிலுணருமாறு வரையத்தொடங்கினன்.

## முகவுரை.



இம்மான்மியம் வடமொழிக்கண் அறுபான் அத்தியாய முள்ளவென்ப, அவற்றுள் இப்போதிங்கு நிகழ்வது இருபத்தைந்து அத்தியாயமாதலின், அப்புராணிகளும் அவ்வத்தியாயங்களைமாத்திரமே கூறியுள்ளார். அதுபற்றி நானும் அவைகளையே மொழிபெயர்த்தனன்.

அத்தலவடியார்கள் இவ்வத்தியாயங்கட்கு மேலேயுள்ள முப்பத்தைந் தத்தியாயங்களையுந்தேட முயன்றுள்ளார் அவைகளும் சேர்வுற்ற பின்னர் மொழிபெயர்க்கப்படும்.

அத்தலம் மூவர்களும் பாடியிருக்கலாம். இப்போது ஆளுடைய பிள்ளையார், வாகீசர் இவ்விரண்டு நாயன்மார்கள் அருளிசெய்த திருப்பதிகங்களுள்ளனவாலும், தெட்சணத்திலுள்ள மானிடர்க்கே அறம் முதலாகிய நான்கினையும் அளிப்பன என்று கூறியிருத்தலாலும் சிவபெருமான் தனதருட் குறிப்படிவமாகி யெழுந்தருளிய பலதலங்கட்குள்ளும் இப்பிரேமபுரியை உத்தமத்தலமென்று ஸ்ரீமத் பிதாமகரால் மொழிந்ததின் ஐயமின்றென்ப துறுதியாய் உணர்த்துகின்றன. ஸ்ரீமத் பிரேமபுரி எனத்தலத்தின் பெயரும், பிரேமலிங்கமென மூர்த்தியின் பெயரும், கங்காநதியெனக் காவிரி நதிப்பெயரும், புண்ணியாங்குரம் என விமானத்தின் பெயரும் பெற்றனவாகிய இம்மகத்துவம், எத்தலத்து நிகழ்தலின்மை கருதி மூயன்றவாறுகும்.

வடமொழிக்கணுற்ற இம்மான்மியத்திராசியப்பொருள்களை திருநயம் பிரம்மஸ்ரீ, மாத்ருபூத சாஸ்திரிகளால் தெரிந்து பூரணமாயின.

இச்சரித்திர படனஞ்செய்பவர்கள் தமிழ் நடையென்றெள்ளார்கள் இதினுட்பொருளினெட்கடையும் ஆரிடத்தினுள்ளவாறுதல் இம்மான்மிய படனஞ்செய்யிற்குமே இவ்வாறெடுத்து மொழிவாரெனபதுங்கூடத் தெரிந்த பெரியோர்கட்கு நதலுந்திறமின்கின்று ஆயினும் சொற்குற்றங்கண்டு மான்மியத்தகப்பெருருட் கோடல்பற்றி யெனது வெள்ளறிவைத்தள்ளார்களென்று வெளியிடத்துணிந்தனன்.

இங்ஙனம்

அ. நாவிம்மபாரதி.

உ

திருச்சிற்றம்பலம்.

# திருஞானசம்பந்த சுவாமிகள்.

## திருவன்பிலாலந்துறை-பண்-தக்கராகம்

கணைநீடெரி மாலரவம் வரைவில்லா
விணையாவெயின் மூன்றுமெரித்தவிறைவர்
பிணையாமயிலுங்குயில் சேர்மடவன்ன
மணையும் பொழிலன்பிலாலந்துறையாரே. (1)

சடையார்சதிரன் முதிராமதிசூடி
விடையார்கொடியொன்றுடையெந்தைவிமலன்
கிடையாரொலியோத்தரவத்திசைக்கிள்ளை
யடையார்பொழிலன்பிலாலந்துறையாரே. (2)

ஊரும்மரவஞ்சடைமேலுறவைத்துப்
பாரும்பலிகொண்டொலிபாடும்பரமர்
நீருண்கயலும்வயல்வாளைவராலோ
டாரும்புனலன்பிலாலந்துறையாரே. (3)

பிறையும்மரவமுறவைத்தமுடிமேல்
நறைபுண்டெழுவன்னியுமன்னுசடையார்
மறையும்பலவேதியரோதவொலிசென்
றறையும்புனலன்பிலாலந்துறையாரே. (4)

நீடும்புனற்கங்கையுந்தங்கமுடிமேற்
கூடும்மலையாளொருபாகமமர்ந்தார்
மாடும்முழவம்மதிரம்மடமாத
ராடும்பதியன்பிலாலந்துறையாரே. (5)

நீறார்திருமேனியரூனமிலார்பா
லூறார்சுவையாகியவும்பர்பெருமான்
வேறாரகிலும்மிகுசந்தனமுந்தி
யாறார்வயலன்பிலாலந்துறையாரே. (6)

செடியார்தலையிற்பலிகொண்டினிதுண்ட
படியார்பரமன்பரமேட்டிதன்சீரை
கடியார்மலரும்புனல்தூவிநின்றேத்து
மடியார்தொழுமன்பிலாலந்துறையாரே. (7)

விடத்தார்திகழுமிடற்றன்னடமாடி
படத்தாரரவம்விரவுஞ்சடையாதி
கொடித்தேரிலங்கைக்குலக்கோன்வரையார
வடர்த்தாரருளன்பிலாலந்துறையாரே. (8)

வணங்கிம்மலர்மேலயனுநெடுமாலும்
பிணங்கியறிகின்றிலர்மற்றும்பெருமை
சுணங்கும்முகத்தம்முலையாளொருபாக
மணங்குந்திசழன்பிலாலந்துறையாரே. (9)

தறியார்துகில்போர்த்துழல்வார்சமணையர்
நெறியாவுணராநிலைகேடினர்நித்தல்
வெறியார்மலர்கொண்டடிவீழுமவரை
யறிவாரவரன்பிலாலந்துறையாரே. (10)

அரவார்புனலன்பிலாலந்துறைதன்மேற்
கரவாதவர்காழியாஞானசம்பந்தன்
பரவார்தமிழ்ப்பத்திசைபாடவல்லார்போய்
விரவாகுவர்வானிடைவீடெளிதாமே. (11)

திருச்சிற்றம்பலம்.

---

## திருநாவுக்கரசு சுவாமிகள்.

### திருவன்பிலாலந்துறை திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்.

வானஞ்சேர்மதிசூடியமைந்தனை
நீநெஞ்சேகெடுவாய்நினைகிற்கிலை
யானஞ்சாடியையன்பிலாலந்துறைக்
கோனெஞ்செல்வனைக்கூறிடக்கிற்றியே. (1)

காரணத்தர்கருத்தர்கபாலியர்
வாரணத்துரிபோர்த்தமணாளனார்
ஆரணப்பொருளன்பிலாலந்துறை
நாரணற்கரியானொருநம்பியே. (2)

அன்பினானஞ்சமைந்துடனாடிய
வென்பிலானையுரித்திக்கனைந்தவன்
அன்பிலானையம்மானையள்ளூறிய
அன்பினானினைந்தாரறிந்தார்களே. (3)

சங்கையுள்ளதுஞ்சாவதும்மெய்யுமை
பங்கணாடிபாவியேனுனய
அங்கணனெந்தயன்பிலாலந்துறைச்
செங்கணாரடிசேரவும்வல்லரே. (4)

கொக்கிறகர்குளிர்மதிச்சென்னியர்
மிக்காக்கர்பரமெரிசெய்தவர்
அக்கரையினான்பிலாலந்துறை
நக்குருவருநம்மையறிவரே. (5)

வெள்ளமுள்ளவிரிசடைநந்தியைக்
கள்ளமுள்ளமனத்தவர்காண்கிலர்
அள்ளலார்வயலன்பிலாலந்துறை
யுள்ளவாறறியார்சிலருபரே. (6)

பிறவிமாயப்பிணக்கிலழுந்தினும்
உறவெலாஞ்சிந்தித்துன்னியவாகாதே
மறவனெம்பிரானன்பிலாலந்துறை
மறவாதேதொழுதேத்திவணங்குமே. (7)

நுணங்குநூலயன்மாலுமிருவரும்
பிணக்கியெங்குந்திரிந்தெய்த்துங்காண்கிலர்
அணங்கனெம்பிரானன்பிலாலந்துறை
வணங்குநம்வினைமாய்ந்தறம்வண்ணமே. (8)

பொய்யெலாமுரைக்குஞ்சமண்சாக்கியக்
கையன்மாருரைகேளாதெழுமினோ
ஐயனெம்பிரானன்பிலாலந்துறை
மெய்யன்சேவடியேத்துவார்மெய்யரே. (9)

இலங்கைவேந்தனிருபதுதோளிற்று
மலங்கன்மாமலைமேல்விரல்வைத்தவன்
அலங்கலெம்பிரானன்பிலாலந்துறை
வலங்கொள்வாரைவானோர்வலங்கொள்வரே. (10)

திருச்சிற்றம்பலம்.

சிவமயம்.

திருவன்பிலாலந்துறையென்னும்

# பிரேமபுரிமான்மியம்.

## காப்புகள்,

### தரவு கொச்சகம்.

### பிரம்மடுண்டிவிநாயகர்.

முத்தியவா ருயிர்க்கருளும் முதலன்பின் மான்மியத்தைப்
பத்தியவா றெடுங்கூறப் பணமணியுங் கணாவீசங்
கத்தியவா ரிதியுலகோர் கருதுமுதற் கடவுளெனுஞ்
சத்தியவாசகத்தண்டித் தந்திமுகன்றாள்பணிவாம் 1

வேறு.

### பிரேமலிங்கம்.

ஒரேநிலைமதியைநிறுவிப்புற்றுருவா யுற்றவான்மீகமா
முனியாச், சுரேசனைமுதலோர் பரவிடவிப ற்றந்தங்கநற்க
ருணையுமிடையப், பிரேமனையிருப்புவல்லியுமிறுத்துப்பெ
றலரும்பதந்தருந் தயையின, பிரேமலிங்கேசர்தம்மையல்
லாது பேசுறு பிறவென்றனுளமே. 2

வேறு.

### சௌந்தரநாயகி.

காமேவுஞ்சுரேந்திரனுங்கமலநயனனு மிறைஞ்சுங்கருணை
க்கண்ணி,நாமேவும்பாரதியோன்வடிவாயடுண்டுமெனைநல்கு
மெங்கள், பூமேவுமென்னினைவும் முட்டின்றிமனங்களிக்கப்
புரிவானன்பின், மாமேவுஞ்சவுந்தரிடபேர்வகித்திருக்குமு
தல்விசரண்மனத்துட்கொள்வாம். 3

வேறு.

### சித்திவிநாயகர்

பத்திவிளைவினுங் கல்விபொருளை விளைவினு மில்லம்
பாலர்நாவ, லித்திவிளை நிலமுழுது மனுக்கவிளைவினுந் தரு
வோமடமையோர் சூழ்ந்த, கத்திவிளை கநகாரியலையைவி
ளைவினு மருளுங்கம்மாமன்பிற், சித்திவிநயக னெனும்பே
ர்ச் சத்தியவா சகக்கரியைச் சிந்திப்போர்க்கே. 4

வேறு.

### முருகர்.

எவ்வேபுனையுந் தடங்கண்களிமையாத்தேவ குஞ்சரி
யை, முவ்வேழொருமன்னிருதேவர் முதல வனளிக்கம
ணம்புணர்ந்த, செவ்வேறனையசாலகடங்கடச்சூர்க்கலா ப
ச்சிகாவலமர், செவ்வேலமருங் கைப்பெருமாடிருத் தா
ண்மலர்கள்சிரத்தணிவாம். 5

### தக்ஷிணாமூர்த்தி.

வில்லாலிகழத் திரிக்குணத்தர் வேதாங்கத்துட்பொருள்வினவி, யெல்லாநிறைந்தகேள்வியினாளெண்ணில் கழிமெய்ந்நால்வருக்கா, வல்லானிலவு சளத்தர்பதினாறுவயதுவாவடிவாக், கல்லானிழற்கீழிருந்தகுருகமல சரணங்களை நினைவாம். 6

வேறு.

### நந்தீச்சுரர்.

அந்திவான்மெய்யரன்பிரதோடத்தின்
வந்தியாவருந்தேவர்மணிமுடிப்
பந்தியாவிபிடம்புடைபாணிக்கோ
னந்திதேவர்சழன்மலர்நணுவாம். 7

வேறு.

### சண்டேசவடிகள்.

விண்டேசனியல்வினையை வித்தியுன்மாலியும்புரிய விளக்குநீல, கண்டேசர்மான்மியத்தின் கசடறத்துப் புரிந்தருளுங்கடற்குழ்டல்ல, வண்டேசர்புனைநின்மாலியம் முடித்தவடியார்க்குளதிபரான, சண்டேசர்திருவடிச் சீதளமலரை முக்காலுந்தரிசித்தார்வாம். 8

### சரஸ்வதி.

நிலைமகத்தினிரவிகுலத் தனர்க்கனுலோசனமிரந்தநிமலசாமி, யலைமறிகா விரிக்கங்கை யமுனையொடுங் கூடியிடத்தன்பிலாதித், தலைமகத்தை நுவலவென்றன்று வினினித்துதவத்தவளமேனிக், கலைமகளைவிதாதா வின்றுமகளை யெப்போதுங்கருத்துட்சேர்ப்பாம். 9

வேறு.

### நவதீர்த்தம்.

பணிகண்ணியப்பிரேமபுட்கரணியைப் பாநுவிந்து
வணிகன்னன்சாரச்சுவதத்துட மமுதவாவிப்
பிணிகல்லுஞா நட்புனல் பேர்கொள் பிரமதீர்த்தம்
மணிகர்ணிகை யைத்திரி வேணியை வந்திப்போமே. 10

வேறு.

### சம்பந்தர்.

ஆனகங்கடலிற் குமுறிடிப்புகலியம்பதியினிலுதித்தலக, மானவர்மூன்று மலந்தமிந்தவர்கள் வானகமடைகுவானருட்பாக், கானமொன்செவிக் கேற்றிநிந்திரியகலைக்கட் பனை ஞானப்பாலருந்தும், ஞானசம்பந்தர்திருவடிக்கமலமலர்களெஞ்ஞான்றினுந்துதிப்பாம். 11

உ

சிவமயம்.

# ஸ்ரீமத் பிரேமபுரிமான்மியம்.

## 1—வது, சூதர் நைமிசவனம் வந்தடைந்த அத்தியாயம்.

பூர்வம் ஒருகாலத்தில், குருக்ஷேத்திரத்திலிருந்து நைமிசவனம் வந்தடைந்த முனிவர்களுடனே அந்நைமிசவனவாசிகளான முனிவர்களுங்கூடிப் பன்னிரண்டு வருஷகாலவளவும் செய்து முடியத்தக்க தீர்க்கசத்திரமென்னும் யாகத்தைத் தொடங்கிப்புரிந்து வருவதுகேட்டு, அவ்வேள்வியைக்காண வந்தடைந்த பதினெண்புராணங்களையும் நன்குணர்ந்த சூதபுராணிகரது வரவறிந்து பிர்ம்மானுசந்தானஞ்செய்பவர்களும், தீவிரமான விரதத்தையுடையவர்களும், குருமுகத்தில் ஸாங்கமாய் வேதாத்தியயனஞ்செய்தவர்களும், எந்தப்பாவங்களையும் போக்குவதினும் இடைவிடாது செய்யும் வேள்விக்கருமங்களினாலுண்டாகுஞ் சோம்பலை நீக்குவதினும், சிவகதையைக் கேட்பதினும், விருப்பமுடையவர்களாகித், தத்தங் காலைக்கடன்களை முடித்துவிட்டு, ஆசனத்தை விட்டெழுந்து, அம்மகச்சாலையின்கண் எழுந்தருளிய அச்சூதபுராணிகரை நன்கு பூஜித்துப் பின்னர் கேட்கத்தொடங்கினர்.

எல்லாந்தெளிந்த சூதபுராணிகரே! முன்னரோ இத்தீர்க்கசத்திர யாகசமயத்தில், எங்களால் கங்காதிமுதலிய பலதீர்த்தங்களின் மகிமையும், பல புண்ணியக்ஷேத்திரங்களின் மான்மியங்களும், உமது முககமலத்திலிருந்து கேட்கப்பட்டன. அவற்றுள் காவிரிதீரத்தில் திகழும் பல தலங்கட்குள் சிறப்புற்ற பிரேமபுரி என்னும் ஸ்தலம் ஒன்றிருப்பதாகச் சொல்லியிருக்கிறீர். ஆதலால் இப்போது அத்தலமான்மியத்தை உரைத்தருளும். இம்மகத்தில் எஜமானர்க

ளும், ருத்திவிக்குகளுமாகிய நாங்கள் வேள்விக்கருமங்களை ச்செய்து இளைப்புற்றவர்களாயிருந்தாலும், இப்போது அவ ற்றை நீர் சொல்லுங்கதையாகிய அமுதபானத்தினால் நீக்க விரும்புகிறோம். எக்கியம், தானம், தவம் இவைகளுக்கு மேலாயுள்ளது ஞானம். அந்த ஞானமானது சிவகதைகே ட்டலாற் பெறத்தக்கது. ஆதலின், இப்போது நாங்கள் சிவகதை கேட்டலில் விருப்பமுடையவர்களானோம் என் றுசொல்லிய அம்முனிவரர் வார்த்தையைக்கேட்டு, வியாச முனிவரிடத்தில் பதினெண்புராணம் முற்றுங்கற்றறிந்த சூதபுராணிகர் அம்முனிவர்களால் உணர்விப்பித்த அத்தல த்தை நினைந்து, தனது மேனிமுழுதும் மயிர்க்கூச்சலடை ந்து, மத்தகத்தில் இருகைகளும் கூப்பிக்கொண்டு சிரக்கம் பம்புரிந்து விரித்துரைப்பாராயினர். எங்கும்பரந்த மிகுபு கழுற்ற நீங்கள் யாதுமுணர்ந்தவர்களாயிருந்தும் ஈங்கு என் னையலங்கரித்துப் பெருமைபண்ணு மெண்ணமுடையவர் களாய் என்கண்ணிருந்து சிவகதையை அடிக்கடி கேட்க விரும்புகிறீர்கள். உங்களினின்றும் யாதுகாரணத்தினால் நினைப்பிவிக்கப்பட்டதோ அதனால் நானும் ஜன்மசாபல்வி யமடைந்தனன். ஸநாதனரும், ஷட்குணபரிபூரணருமாகிய சுயம்புவானவர் எத்தலத்தில் விளங்குகின்றனரோ, சா விரிகாயத்திரியுடன் எத்தலத்திற் பெருகுகின்றனவோ, கர்க்கமுனிவர் வடவிருக்ஷ வடிவுகொண்டு எத்தலத்தில் வெந்துச்சம்புவை நன்கு பூசிக்கின்றனரோ, எத்தலத்தில் உ லகங்களைச் சிருஷ்டித்த ஒன்பது பிரஜாபதிகளுக்கும் பிதா வாகிய சாக்ஷாத் பிர்மாவானவர் தவம்புரிந்து பார்ப்பதி யார் சாபத்தினின்று நீங்கி உலகம் படைத்தலை யடைந்தன ரோ, கேகயனென்னும் அரசனுக்கு மண்டுேகவடிவம் எத் தலத்தில் நீங்கியதோ, எத்தலத்தில் திருமாலானவர் பிரு குமுனிவர் சாபம்நீங்கி அழகுள்ளதேகம் அடைந்தனரோ, எத்தலத்தில் திகம்பரனாகிய சங்கரரோ காக்ஷிதக்து தேகாந் தத்தில் தாரகப்பிர்மவடிவாகிய பிரணவத்தை உபதேசிக்கி ன்றனரோ, எத்தலத்தில் தீர்த்தங்களிற்சிறந்த பிரமட

கரணியென்னும் தீர்த்தமிருக்கின்றதோ, எத்தலத்தில் இவைமுதலாகிய பேராச்சரியங்கள் உண்டாகின்றனவோ, எத்தலத்தை ஆ ஆ! நினைத்தவுடனே எம்மகங்களையும் புரிந்த பலனுண்டாகின்றனவோ, அத்தல மான்மியத்தை நல்லொழுக்கமில்லாதவர்கட்கும், தானத்தையும், தவத்தையும் யாகத்தையும் செய்யாதவர்கட்கும், சிவபூசை இல்லாதவர்கட்கும், சிரவணஞ்செய்யும் நல்லபுத்தியுண்டாகாது. நீங்கள் எல்லாமறிந்தவர்களாயிருந்தும் உலகங்கட்குக் கருணைகூரும் விருப்பத்தினல், என்னைவிரும்பி வினவினீர்கள். அத்தலமான்மியமுழுதும் ஆதிசேடனுலும், குருபகவானுலும் சொல்லிமுடியாது. அற்றேல் சிறிய புத்தியுடைய நான் அம்மான்மியத்தை எவ்வாறு வசனிப்பேன். ஆயினும், எனது குருகடாட்சத்தினுல் தெரிந்தவளவிற் சிறிது வசனிக்கின்றனன் என்று சூதமுனிவர் சொல்லத்தொடுத்தனர்.

முதலாவது அத்தியாயம் முற்றிற்று.

---

## 2—வது, பிரோமபுரிஸ்தல மகிமையுரைத்த அத்தியாயம்.

ஓ நைமிசமுனிவர்களே! பிரமன்,திருமால்,இந்திரன்,சூரியன்,சந்திரன், பரத்துவாஜர்,வால்மீகர், வசிஷ்டர்,காசிபர், பரதர், வியாசர், அளர்க்கராஜன், அகஸ்தியர், காவிரி, சுக்கிரீவன், இராமன், ஜைமினிமுனிவர் முதலியோர்களால் நன்ருய்ப் பூஜிக்கப்படுடவரும், மங்களச்சொரூபியும், ஸ்ரீமத்பிரோமபுரிஸ்தலத்தில் விளங்குடவருமாகிய அப்பிரோமலிங்கத்தையும், இடையூறென்னும் மலைக்குக் குலிசமாகிய பாதகமலங்களையுடையவரும், தம்மையடுத்தவர்கட்கு எல்லா அபீஷ்டங்களையுங்கொடுப்பவரும், பிர்ம்மசொருபியும் கௌரியின் முகத்தாமரைக்குச்சூரியனும், மேலாகிய கஜமுகத்தையுடையவரும், பூமியில் ஸத்தியவாசகரொன்றுபெயர்பெற்றவருமாகிய விநாயகக்கடவுளையும் முந்தித்தியானித்து மகாலிங்கவடிவாகிய பிரோமலிங்கத்தையும் சாமவேதி விநாயகரையும்

வினைத்து குருமார்களைவணங்கிப் பின்னர் பிரேமபுரிமான்மியத்தைச் சொல்லத்தொடங்கினர். பூதலத்தில் சோணாட்டில் மனதுக்கினிய காவிரிவடகரையில் திருவையாற்றுத்தலத்தின் மேற்றிசையில் இரண்டுயோசனை தூரத்திலும், திருத்தவத்துறையின் குணதிசையிலும், திருவானைக்காவின் கீழ்திசையில் பத்துக்குரோசதூரத்திலும் தாலைழவனத்திடையினுமுள்ள ஸ்ரீமத் பிரேமபுரி யென்னுந் தலமானது * வகுளம், தேமா, பனை, சுரப்புன்னை, தெங்கு, பலா முதலிய தருக்களா லலங்கரிக்கப்பட்டும், மல்லிகை, சிறுசெண்பகம், ஜாதிமுதலிய பூங்கொடிகளினால் பரிமளிப்பதும், குயில், மயில், கிளிகளால் சூழப்பெற்றதும், அனேக மிருகக்கூட்டங்களால் நிறைந்ததும், காவிரி நீரால்குளிர்ந்ததும், பலநிறமுள்ள கமலம், செங்கழுநீர், ஆம்பல், நீலோற்பலம் முதலிய மலர்களால் நெருங்கியதும், அன்னம் நீர்க்காக்கை இவைகள் சூழ்ந்த வாவிகளால் விளங்குவதும், விஞோதமாகிய வெண்மணல்கள் குவிந்ததும், சிள்ளோசை மாறாததும், வைகாகசர், வாலகில்லியராதிமுனிவர்கள் வசிக்கப்பெற்றதும், ஸ்வாகா, ஸ்வதா, வஷட்காராதிவேத மந்திரவொலிகளால் நிறைந்துள்ளதும், அழகிய சாமகானங்களால் சிவபெருமானுடைய ஸாநித்தியத்தை அடைவிக்கப்பெற்றதும், அக்கினிஹோத்திரமுமுடைய பல இல்லங்களால் நிறைந்ததும், தினமும் நல்ல திருவிழாக்கள் நடப்பனவுமாக எந்நாளும் விளங்குகின்றது. அத்தலத்தில் விரோதிகளாகிய விலங்குகளும், அவிரோதிகளாகவே சஞ்சரிக்கின்றன. ஜாதி யானைகள் துதிக்கைகளால் அடிக்கடிச் சிங்கங்களுக்குத் தினவுபோகச் சொறிந்து கொடுக்கின்றன. தாயினிடத்தூட்டும் புலிக்குட்டிகளை வெருட்டி மான்கன்றுகள் தம் வாயினின்று நுரைபெருக அதன் குட்டிகள்போலே மடியினின்று ஊட்டுகின்றன. ஆ, ஆ! இஃதென்ன ஆச்சரியம்! சர்ப்பங்களின் படங்களிலே கீரிப்பிள்ளை ஏறிவிளையாடுகின்றன. இம்மகத்துவங்களுடைய அத்தலத்தில்

* வகுளம்=மகிழ்.

பிரமபுஷ்கரணிக்கரையிலே பிரமாதிகளால் துதிக்கத்தக்கதும், ஸனாதனமுமாகியபிரமலிங்கமே ஸானித்தியமாகப் பிரமவல்லியுடனே புண்ணியாங்குர விமானத்துள் விளங்குகின்றது. அத்தலத்தில் மகாலிங்க வடிவமாகிய பிரமபுரேசருடைய தரிசனமானது மனிதர்களுக்குப் பூர்வஜென்மங்களில் புரிந்த தவவிசேஷத்தால் அடையப்படுகின்றது. அதிக மகிமையுடைய அப்பிரமலிங்க தரிசனமும், அவரை வணங்கலும், அவரை அர்ச்சித்தலும், அவர் நாமம் உச்சரித்தலும், அவரைச் சிந்தித்தலும் தனது சற்கருமங்களை அவருக்கருப்பணம் புரிதலுமாகிய இவற்றுள் ஒவ்வொன்றாமே மனிதர்களுடைய பாவத்தை உடனே நீக்குகின்றது. எம்மனிதன் வடதருநிழலில் எழுந்தருளிய பிரமலிங்கத்தைப் பூமியிலுள்ள நன்னதி நீர்களால் ஆட்டுகின்றனனோ அவன் சிரத்தில் ஆகாசகங்கை அலையெறியும் நீருடன் விளங்குவ துறுதியே. எம்மனிதன் பிரமலிங்கத்தின் சிரஸில் நல்ல வில்வங்களினால் அலங்கரிக்கின்றானோ அவன் தலைமிசை விளங்காநின்ற சந்திர கலையினால் அலங்கரிக்கப்படுவ துறுதியே. எம்மனிதன இந்த வடமூலநாதரை நல்கினையோடும் வலம் வருகின்றானோ அவனைத் தேவர்கள் சுவர்க்கத்தில் அயமேதம் செய்த தேவேந்திரனாக வலம்வருவ துறுதியே. எம்மனிதன் தேவதேவனாகிய பிரமலிங்கத்தை பத்திமிகுதியுடனே தலையினால் வணங்குகின்றானோ அவன் பலவேதங்களால் விளங்குகின்ற நான்கு முகங்களையுடையவனாகத் தேவர்களால் துதிக்கப்பட்டுச் சத்தியவுலகில் விளங்குவதுறுதியே. எம்மனிதன் அத்தலத்தில் சிவராத்திரியில் சோம்பலின்றிக் கண் விழிக்கின்றானோ அவனது கண்களுக்கிடையாக மற்றொருகண் தோன்றி அப்பரமனுக்குத் தோழனாவ துறுதியே. புராதனமாகிய அப்பிரமபுரியிலே ஜனனத்தையேனும் மரணத்தையேனும் அடைந்த விலங்கு, பறவை, புழுக்களும் தெய்வக்குழாங்களால் வணங்கப் பெற்றுச் சுவர்க்கத்தை அடையுமென்னில் அங்கு நாளும் வசிக்கும் மனிதர்களுக்கு நான் யாது சொல்லவேண்டு

வது. அத்தலத்திலே அன்னம் கொடுப்பவனும் அதை வா ங்கிப் புசிப்பவனுமாகிய இவ்விருவர்களும் பாவங்களினின் று நீங்கிப் பின்னர் இரவி மண்டலத்தைப் பேதித்து விரை வில் வேண்டிய நல்லுலகங்களை அடைகின்றனர். அத்தலத் திற் புரியும் அன்னதான மகிமையையும் சொர்னதான மகி மையையும் கொஞ்சமேனும் பிர்ம்மனுலும் ஆயிரங்கோடி வருடங்களிலும் வர்ணிக்க முடிவுபடாதனவாகும். பூமியில் காசி, பிரேமபுரி இவ்விரண்டுமே முன்னுளில் பிர்ம்மனுல் மோக்ஷாங்குர நிலைமைக்கண் ஏற்படுத்தப்பட்டன. ஸனாதன மாகிய பிரேமலிங்கமே விசுவேசர், அங்குள்ள வடதருவே அக்ஷய வடதரு, இங்குள்ள பிரம உருவாகிய ஸத்தியவாசக ரே அங்குள்ள துண்டி விநாயகர். காவிரியே தெக்ஷண கங்கை. காயத்திரியே அந்த யமுனை. ஸரஸ்வதியே அந்தர் வாகினியாகப் பெருகுவள். ஆதலின், திரிவேணி சங்கமமே கங்கையமுனையின் வடிவமாகிய அந்த இடத்தில் எம்மனிதர் ஸ்நாநஞ்செய்கின்றனரோ அவர்கள் திரிவேணியில் மூழ்கிய பலனை அடைவாரெனபதி லையமில்லை. அங்குள்ள வடதரு நிழலில் பிதிரர்களைக் குறித்துத் திதியை புரிபவன் கயையில் அக்ஷயவடதரு நிழலில்புரியும் பயனைப் பெறுவான். அமா வாசையிலாவது, விதீபாதத்திலாவது, சந்திரசூரிய கிரகண ங்களிலேனும் மாதப்பிறப்புகளிலேனும் விசேஷமாக அத்தி ரிவேணி ஸங்கமத்தில் ஸ்நாநம் செய்து, சிரார்த்தத்தையே னும்,பிண்டதானத்தையேனு், திலதருப்பணத்தையாயினு ம், செய்பவர்களுக்குக் கயையிற்செய்யும் பலனுண்டாகும். அவரது பிதிரர்கட்கும் குறைவில்லாத் திருப்தியுண்டா கும். புண்ணியாங்குர விமானத்தின் சுற்றளவாகிய இர ண்டு யோசனைமட்டுமுள்ளப் பிரதேசங்கள் மிகு புண்ணிய மாகிய ஸ்ரீமத் பிரேமபுரிஸ்தலமென்பதிலையமேயில்லை. அங் குள்ள மணல்களெல்லாம் இலிங்கங்களே. அங்குள்ளம றையவரெல்லாந் தேவர்களே ஆகும். அந்த எந்தத்தே வர்கட்கும் ஜெனிப்பதில் விருப்பமிருப்பதாலும் சிவபெ ருமானுடைய அன்பிற்கிடமாயிருத்தலாலும் அத்தலத்தி ற்குப் பிரேமபுரியென்னும், பெயர் உண்டாயிற்று. மனித

ர்சட்குத் தவத்திற்ருெடங்கிய உடனே அத்தவப்பயனெய் துகின்றது. பத்தர்கள் ஆசையை நிறைவேற்றித் தருதலின பிரேமலிங்கமெனப் பெயர்பெறப்பட்டது. அத்தலத்தில் நாளும் காற்றையுண்டும் ஐம்பொறிகளேயடக்கியும் பிராணயாமத்தால் நாடியைஸ்தம்பித்தும் தலேக்கண் தனிருகைகளேயுந் தூக்கிய முனிவர்களும் எப்பொழுதும் உள்ளத்தில் சர்ப்ப பூஷணராகிய சிவபெருமானேச் சிந்தித்திருக்குஞ் சிவயோகிகளும் இப்பூவிற் கைலாசம்போலே ஆவலுடன் எக்காலத்தும் சேவை புரிகின்றனர். காவிரிநதி காயத்திரி நதியுடனே கூடுமிடத்தினும் அத்தலத்தின் புண்ணியாங்குர விமானத்தினருகுள்ள அமுதவாவியினும் மனிதர்கட்கு முன்செய்த ஸற்கருமங்களினுல் ஆடிட நேரும். அப்படியாடிட நேரிடுமேல் அப்புருஷன் ஜெனனமொழிந்து சிவபதம்பெறுகின்றனன் என்றுரைத்துப் பின்னருஞ் சூதமுனிவர் சொல்லத்தொடங்கினுர்.

இரண்டாவது அத்தியாயம் முற்றிற்று.

## 3—வது, பிரமன்சாபமடைந்தவத்தியாயம்.

மான் மழுத்தரித்தவரும், விளங்குகின்ற சென்னியையுடையவரும், விசாலமான நெற்றிக்கண் அக்கினியால் மன்மதனேயெரித்தவரும், மூன்று கண்ணினரும், பலமுனிவர்களாலும் எல்லாத்தேவர்களாலும் பூஜிக்கும் திருவடிக்கமல மலரையுடையவரும், மகாதேவருமாகிய பிரேமபுரீசரை மனத்திருத்தி மீட்டும் அந்நைமிசமுனிவர்களே நோக்கிச் சூதமுனிவர் சொல்லுவாராயினர். ஓ முனிவர்களே! பண்டு திருக்கைலாஸச் சிகரத்தில், காயத்திரியென்னும் பெயருள்ள பாறையில் ஸனத்குமாரமுனிவர் பெருமை தங்கிய நாரதமுனிவருக்குரைக்க, அம்முனிவர் ஜைமினிமுனிவருக்குக்கூறியஅக்கதையை இப்பொழுது நான் உங்களுக்குச் சொல்லுகின்றனன். பொன்மணிமயங்களாகிய அழகுள்ள அனேகம் கோடி கொடுமுடிகளால், விளங்குவதும், எப்பொழுதும் மனக்களிப்புடன் முனிவர்க

னால் வஸிக்கப்பெற்றதும், விநாயககணங்களும், ஸ்கந்த கணங்களும், வேதாளாதி கணங்களும் நிறைந்திலங்கியுள்ளதும், நற்றுருண்டினுல் அடையப்பெற்ற ஸாரூப்பியப்பதவியுள்ள மகான்களால் வஸிக்குந்தேஜஸையுடையதும், மிகுகுளிர்ச்சியுடைய பலவித ஓடைகளாலும், பலவிதவாவிகளாலும், பல நதிகளாலும் நிறைந்து புண்ணியவுருவமாகிய பறவைகளாலும், மிருகங்களாலும் நெருங்கி விளங்குவதும், சண்பகம், அசோகம், புன்னாகம், பாரிஜாதம் இவைமுதலிய தருக்களால் நிபிடமாய் விளங்குவதுமாகிய கயிலையங்கிரிக்கண் ஒருசாருள்ள உத்தியானவனத்திலே பார்வதிதேவி நறியமலர்கொய்து நிதமும் தனது சகிமாருடனே விளையாடிவரும் நாள்களி லொருநாள் அத்தேவி அச்சோலைக் கண் வந்தனள். அதுகாலத்தில், ஐந்து முகனுகிய பிரமனும் அன்னவாகனமேறிச் சிவபெருமானுகிய விடபத்துவசரைத் தெரிசிக்கும்பொருட்டு அத்தேவியுற்ற உத்தியானவனமார்க்கமாய் வருகையில், அதுகண்டதேவியின் ஸகிமார்கள் பவானியைநோக்கி "ஓ தேவி! இடபத்துவசரும், பஞ்சவத்திரருமாகிய உனது நாதர், வெள்விடையேறி உன்னைப்பார்க்கவிரும்பி இதோவருகின்றனர் பார்" என்று கூறிய அவ்வசனம் கேட்டுச்சருவாணியும் நாணமெய்தி இருப்பப் பின்னர் பிரமனும் தனது சமீபத்தில வருதலையறிந்து மனங்கொதித்து முனிவுகொண்டு ஓபிரமனே! நீ யாதுகாரணத்தால் ஐந்துமுகங்களுடனே அன்னவாகனத்திலுமேறிச் சிவஸாம்யத்தை அடைந்து எனக்கு மோகத்தை விளைத்தனையோ அக்காரணத்தாலே உனது தலைகளிலொன்றைப்பரமசிவன் கொய்துவிடுவார். அன்றியும் என்அருகுறும்போதும் வாகனமூர்ந்து வந்ததனுல் உலகம்படைத்தலை நீங்குவாயென்று சபித்தனள். இவ்வாறு கௌரியாற் சாபம்பெற்ற பிரமனும் தன் இந்திரியங்களெல்லாம் மிகவும் கலங்கித் தேவதேவனுகிய சங்கிரருடன் சன்னிதானமடைந்தனன். எவ்வுருவமும் தானேயாகிய பகவானும் தன்பால்வந்த பிரமனைநோக்கிய உடனே மலைமகளுக்குப் பிழைசெய்தனனென் றுணர்ந்து முனிந்து அவனது தலைக

ளில் ஒன்றைத்தனது நகத்தினாற்கொய்து தனதுதேவி க்கு மகிழ்வுசெய்தருளினர். பின்னர் பிரமன் சிவபிரானைப் பரபரப்புடன் அஞ்சலித்து மனங்கலங்கி இனிச்செய்வ திஃ தென மேலொன்றும் தோன்றாதவராகி இஃதென்னையென ச்சிந்தித்துச் சத்தியமென்னும் தனதுலகத்தையடைந்தனர். அதன்பின்ஒருகாலத்தில் மிகுந்ததவவலிமையுள்ளவர்களும், அக்கினிபோற் றேசுடையவர்களுமாகிய மரீசி முனிவர்மு தலிய ஸப்தவிருடிகளும் சத்தியவுலகமடைந்தனர்கள். அ வ்விடத்தில் கிரகணம்பிடித்த சூரியனைப்போலே பொலி வுகுறைந்து ஒருதலை பறிபோகியுமுள்ள பிரமனைக்கண்டு அவ்விருடிகள் தேவிக்கு அபராதம செய்ததையும், அவள் சபித்ததையும் சிவபெருமானால் வி..த்.துற்றதையும் ஞா னக்கண்ணாலுணர்ந்து, மேல்வருமாறு பிரமனைச் சமாதா னம்செய்து கூறுகின்றனர். ஓ, பிரமாவே! நீர் இப்போ து மனங்கலங்கவேண்டாம். சுகமாயினும் துக்கமாயினும் வாத்தக்வை வந்தேதீரும். ஞானியானவன் சுகத்தினால் மகிழ்ச்சியையும், துக்கத்தினாற் றுன்பத்தையும்பொருமலே இவ்விரண்டையும் எப்போதும் ஸமமாகவே நோக்குகின்ற னன். குணவடிவாய் விளங்கும் இச்சிவமாயையானது வ ருந்தியும் தள்ளத்தகாதது. ஆனதுபற்றி எல்லாமறிந்த உம்மையும் இப்போது மோகப்படுத்துகின்றது. இந்த ஆபத்துக்குக்காரணத்தையும் சொல்லுகின்றோம். கேளும் பிரமாவே! முன்னோர்காலத்தில், உலகவிரோதிகளான சுந் தோபசுந்தர்களைச் சம்ஹாரம்புரியும் நிமித்தம் உம்மால் சொ ர்க்கத்திலுள்ள அழகிய மகளிரிடங்களிலிருந்து சிறிது சிறிதாக அவர்களழகை எடுத்துத்திரட்டி எவ்வுலகத்திலு ள்ள மகளிர்களினும் அழகுடையவளாகத் திலோத்தமை யைப் படைத்துச சொந்தப்பெண்போன்ற அப்பெண்ணை யேநோக்கி மோகமடைந்தீர். அதனால் இத்துனடம்நேர்ந்த து. இத்துன்பத்தை ஜலத்திலுண்டானசேற்றை அச்சல த்தைக்கொண்டே நீக்குமாறுபோலச் சிவாபராதத்தினால் உண்டாகிய தோஷத்தை அச்சிவனே நீக்குகின்றனர். ஆ னதுபற்றிச் சௌரிக்கு அபராதஞ்செய்த உம்மால் அடை

யப்பட்ட வருத்தமானது அக்கௌரியினாலேயே நீங்குகின்றது. ஆதலால் பார்வதியையும், பரமசிவத்தையும் மனமகிழ்விப்பித்தால் சாபமோசனம் உண்டாகுமென்று கூறித்திரும்பவும், அடிக்கடிச் சமாதானம்புரிந்த அவ்விருடிகள் வசனங்கேட்ட பிரமன், அவர்களைப் பார்த்து, "ஓ இருஷிகளே! நான் எவ்வாறு பரமசிவத்தையும், பார்வதியையும் பூஜிக்கத்தகுந்த ஸ்தலத்தைக் கண்டு பூஜித்துச்சுகம்பெறுவேன்" என்று கூறிய பிரமனை நோக்கிப்புகல்வதாயினர். கேளும், ஓ! நைமிசமுனிவர்களே! என்று சூதமுனிவர் பின்னும்சொல்லத்தொடங்கினர்.

மூன்றாவது அத்தியாயம் முற்றிற்று.

---

## 4—வது, கேகயன்சாபநீங்கிய வத்தியாயம்.

பிறகு மகிமைதங்கிய அத்திரிமுனிவர் பிரமனைநோக்கிச்சொல்லலுற்றனர். ஓ பிர்மாவே! உமாமகேசர்களுக்கு மிக விருப்புள்ளஸ்தலத்தை கூறுகின்றனன் கேளும்? பெரியகாடுகளையுடையநாவலந்தீவில் அநேகஸ்தலங்களும் புண்ணியத்தைக் கொடுக்கும் பலதீர்த்தங்களும் இருக்கின்றன. சந்தேகமில்லை. கங்கைநதிமுதலிய நதிதீரங்களிலுள்ள க்ஷேத்திரங்கட்குள் மிகவுஞ்சிறந்ததும், பிரேமபுரியென்று பெயர்பெற்றதுமாகிய ஒருஸ்தலம், பஞ்சநதஸ்தலத்தின் * குடபாலில் இரண்டுயோஜனை தூரத்திலும், திருவானைக்காவலின் §குணபாலில் பத்துக்குரோசதூரத்திலும் விளங்குகின்றது. முனிவர்களாற்சூழப்பட்டுள்ள அந்தஸ்தலமானது தக்ஷிணகயிலாஸமே. அந்தஸ்தலத்தில்பிரேமபுஷ்கரணியென்றுபெயருள்ளமிகுபரிசுத்தமாகிய தீர்த்தமொன்றிருக்கின்றது. அது நினைத்தவுடனே மனிதர்கட்குப் போகத்தையும், வீட்டையும் அளிக்கின்றது. அப்பிரேமபுஷ்கரணிக்கரையில், வடமூலநாதர் பிரேமவ

---

*குடபால்—மேற்கில். §குணபால்—கிழக்கில்.

ல்வியுடன் விளங்குகின்றனர். அதனருகில் திருமாலும் தி ருமகள் பூமகள் சகிதராகி யோகநித்திரை புரிகின்றனர். இப்போது நீர் விரைவின் அங்கடைந்து பிரேமபுஷ்கரணி த்தீர்த்தத்தில் ஸ்நாநம்புரிந்து பார்வதிசமேதரும், தேவ தேவேசருமாகிய அப்பரமசிவத்தைப் பூஜித்துப் பார்வதி யின் கோபந்தணியும்படிக்கு உமது ஓரம்சத்தால் விநா யகவுருப்பெற்று, பக்தர்கள் அவாவை நிறைவேற்றுகின்ற வளும், சௌந்தரியமுடையவளுமாகிய பிரேமவல்லியை ப்பூஜைசெய்து, அத்தேவேசராகிய பிரேமலிங்கத்தையும் தவத்தால் மகிழ்வித்து, யாகங்களாலும் சந்தோஷப்படுத் துவீர். பிரேமவிமானத்தின் நிழலில் ஒரு யாகம்புரிந்தவ னுக்குப் பதினாயிரம் யாகபலனுண்டாகும். அத்தலத்தின் மேற்பாலில் வைரவி வனமென்னும் ஸ்தலத்தில், நாங்கள் எழுவர்களும் உமக்கு எக்கிய முடிவில் வந்து அவபிருத ஸ்நாநம்செய்துவைக்கும் விருப்பமுள்ளவர்களாய் இருக் கின்றோம் என்றுசொல்லிய அத்திரிமுனிவர் வசனத்தை க்கேட்டு, உலகபிதாமகனாகிய பிரமன் அவரை முன்னிட் ட அவ்வேழு முனிவர்களுக்கும் விடையளித்துப் பூதலத் தைவந்தடைவோமென்றெண்ணிச் சத்தியலோகத்திலிருந் து தபோலோகத்தையும், அதினின்று ஜனோலோகத்தை யும், அதினின்று மகர்லோகத்தையும், அதினின்று சுவர்க் கலோகத்தையும், அதினின்று புவர்லோகத்தையும் அடை ந்து அதினின்றும் பூலோகத்தில் வந்து ஜம்புதத்தீவில், கங்கைமுதலிய நதிகளின் தீரங்களை யெல்லாம் நோக்கிக் கொண்டு, காவிரிதீரத்தை அடைந்து ஆங்கு முனிவர் கு ழாங்களால் நெருங்கியதும் பலவிலங்கினங்களோடு கூடிய தும், புண்ணியவடிவாகிய பக்ஷிகளால் நிறைந்ததும் ம னோநிக்கிரஹம் செய்யாதவர்கட்கு அடையத்தகாததுமா கிய பிரேமபுரமென்னும் திப்பியமாகிய ஸ்தலத்தைக் கண் ணுற்றவளவில் அந்தஸ்தலத்தில், ஆனந்தக்கண்ணீர் பெருக வஸிக்கின்ற பரத்துவாஜாதி வேதியர்களால் எதிர்கொ ண்டு சாஸ்திரவிதிப்படிக்குப்பூஜிக்கப்பெற்று அம்முனிவர்

களுடனேசென்று பிறைமதியணிந்த ஜடைமுடியினராகி ச்சவுந்தராயகியுடனே பிரேமபுஷ்கரணிதீர்த்தத்தின் கலாக்கண் பிரேமவிமானத்துள் விளங்கும் பிரேமபுரீசலாவணங்கித் தவம்புரியத்தொடங்கினர். அக்காலத்தில் பிரேமபுஷ்கரணிதீர்த்தத்தில், ஒரு காகத்தினுற் பீடிக்கப்பட்டுள்ள ஒரு மண்டூகமானது ஆகாயத்திலிருந்து கதறிக்கொண்டு விழுந்திறந்தது. அந்தக்ஷணமே உருக்கிய தங்கத்தாற் செய்து இரவிமண்டலம்போல் விளங்கித்தோன்றிய விமானத்தில், * அம்மண்டூக வுருவுநீங்கிப் பன்மணிகளால் அலங்கரிக்கப்பட்ட தேவசரீரத்துடன் விளங்கும் அப்புருஷனைப்பார்த்து பிரமன் மிகுந்த ஆச்சரியமுற்று ஓ தேவனே! தவளையுருவுகொண்ட நீயாவன் எப்படியிந்தத்தேவுரு அடைந்தனையென்று வினவலும் ஒளிவீசுகின்ற கிரீடம், தோள்வளை, முத்துமாலை, நூபுரங்களால் விளங்கும் சரீரமுடையவனுகி, விமானமத்தியிற்றேன்றும் கேகயராஜனுகிய அத்தேவபுருஷன் பிரமன்வசனத்தைக் கேட்டு தன் ஜனனவிருத்தாந்தத்தை மேல்வருமாறு கூறலானுன். கேளும், நைமிசமுனிவர்களே! என்று சூதமுனிவர் பின்னும் கூறுவாராயினர்.

நான்காவது அத்தியாயம் முற்றிற்று.

---

## 5-வது. கேகயன்றனது விருத்தாந்த மூரைத்து முத்திபெற்ற வத்தியாயம்.

வாரீர் பிரமாவே! எனது பூருவசென்ம விருத்தாந்தத்தைக் கூறுகின்றேன். தேவரீரைக் கண்ணுற்ற அளவில் பாபரஹிதனுயினேன். எனது புன்மையான ஜென்மம் நீங்கிற்று. இத்தேவசரீரமும் வந்தது. ஆதலின், உலகத்தில் மகான்களுடைய தெரிசனத்தால் பிரமபதவியு முண்டாகுமே. இஃதொருபெரிதாமோ என்றுரைத்துத் தெய்வ

* மண்டூகம் = தவளை.

விமானத்துள்ள அத்தேவன் பிரமனைப்பார்த்துக் கூறுகின்றனன். பூர்வஜென்மத்தில் மகததேசத்தில் கேகயராஜனென்று பெயர்பெற்ற நான் சிவபக்தி நிறைந்தவனும், பொறுமையுடையவனும், பஞ்சாக்ஷர ஜெபத்தில் விருப்பமுடையவனுமாகிச் சத்துருக்களை ஜெயித்து, மித்திரர்களைக்காத்து மந்திரிகளுடன் மனுநெறிகோணாமல் நன்றாக அரசுபுரிந்து வந்தேன். இடையினழகையுடையவளும் ஜாம்பூனதத் தங்கம்போலே மேனிகாந்தி யுடையவளும், கற்புநிலை தவறாதவளும், அநேக நற்குணங்களை உடையவளும், சிவபக்தியில் சிறந்தவளும், எப்பொழுதும் சிவனடியார்களுக்குப் பணிவிடை செய்பவளுமாகிய என் மனையாட்டியுடனே சுகித்து அரசியல் நடத்திவருகின்ற எனதருகில் ஒருகாலத்தில் சூனியவாதிகளாகிய சில பாஷண்டர்கள் அடைந்து, சிற்சிலகிரியாசித்திகளை என் முன்னர் காண்பிக்கவும், அதனால் நான் நன்கு மோகித்து அவர்களை மிக மரியாதை புரிந்த எனக்கு அவர்களால் மேல்வருமாறு உபதேசிக்கப்பட்டன. ஓ, அரசனே! இவ்வுலகம் சூனியம். இச்சரீரம் சுக்கில சுரோணிதங்களுடைய விகாரமே. ஆதலின், இச்சரீரம் கங்கைமுதலிய பலதீர்த்தங்களால் எப்படிச் சுத்தமாகும்? தருமா தருமங்களும் பொய். மனிதர்கள் மரணமடைந்த பின்னர் வேறுலகங்களை அடைந்திருத்தலுமில்லை. ஏனெனில், சாம்பராகிய இவ்வுடலம் திரும்ப எப்படி உண்டாகும். அப்படி உண்டாகுமேயாகில் பூமியில் எரிந்து சாம்பலான புல்லும், காஷ்டமும் திரும்ப உண்டாக வேண்டுமன்றோ? எப்படியெனில், மேலடையும் சாக்ஷியின்மையால் இச்சரீரம் போனால் வேறுசரீரம் எய்துவதில்லை. ஆதலின், கண்ணாற்கண்டதுகளையே நம்பு மற்றைய பரோக்ஷமுற்றும் அவமென்று நீக்கு. யாகத்தைச் செய், தானத்தைக் கொடு, ஓமத்தைப்புரி என்றுரைத்த சுருதிவசனங்கள் எவ்விதமாயினும் மெய்வருத்திப் பணஞ்சம்பாதிக்கும் நிமித்தமே கவிகள் தமது வல்லமையால் உரைக்கப்பட்டனவென்றி வேறொன்றென்பது இல்லையேயென்று இவ்விதமாகிய திட்டாந்த

தாட்டாந்தியங்களுள்ள அவர்கள் வசனத்தால் நான் அவர்க ளுக்கு வசமாயினேன். பின்னர், சிவபூஜையில் மிக உறுதி யாகிய எனது சிவபக்தியும் நாளடைவில் குறைந்து வந்தது. வேறு தருமங்களிலும் எனக்கு விருப்பமும் நீங்கியது. ஆ யினும், நான் சிலகாலம் இடம்ப நிமித்தம் சில தருமங்களைச் செய்து வரும்போது, எனது நடக்கையை இங்கிதத்தாலறி ந்த என் மனைவி, பரலோக பிதியடைந்து மேல்வருமாறு உரைப்பாளாயினள். ஓ, நாதனே! இப்போது நீர் கெட்ட காரியத்தை என்செய்கின்றீர்? இச்செய்கையால உம்மைச் சிவதருமத்தைத் துறந்தவராக எண்ணுகிறேன். மேலாகிய குதிரை, யானை, வெண்குடை, வெண்கவரி தள்ளத்தகாத ஐசுவரியம் என்னும் இவைகளையும், நல்ல கற்புடைய மனை விகளையும், சற்புத்திரர்களையும், நோயற்று வலிமையுள்ளதே கத்தையும், நிறைந்த ஸம்பத்தையும், நல்ல கிரஹத்தையும், நல்ல வித்தையையும், நற்குலத்தில் பிறத்தலையும், சற்சனர் களுடன் ஸகவசித்தலையும், செழித்த தேயத்தில் சுகமாக வாசம் செய்தலையும், சிவபூஜை செய்தலினால் பெறுவரென ப்பெரியோர் சொல்லுகினறார்கள். காயத்திரி மனுவினால் சொல்லப்படுவதாலும், நமகாதிகளால் துதிக்கப்படுவதா லும், திருமால் கண் தாமரையால் பூஜிக்கப்படுவதாலும் பர சிவனே யாவர்க்கும் மேலானவர். ஆலாஹலத்தைப் புசி த்தமையாலும், திரிபுரதகனம் செய்தமையாலும், சறுவனெ ன்னும்பெயர் பெற்றிருப்பதாலும், வேதங்களால் துதிக்கப் பெற்ற அப்பரசிவனே யாவர்க்கும் மேலானவர். காலாந் தகனுதலானும், மாரனை எரித்ததானும், உருவத்தானும், பெயர்களானும், சிவமாயிருத்தலானும், அப்பரசிவனே யா வர்க்கும் மேலானவர். அவரோ எப்பொழுதும் தியானிக் கத்தக்கவர். அவரே யாவருமடையத்தக்க மேலான இடம். எவ்வுலகங்களும் அவரது உருவமே. அவரன்றி மற்றொ ன்றுமில்லை. சுருதி, ஸ்மிருதி, இதிகாஸம், புராணங்கள் என் னும் எல்லா நூல்களுமே இதற்குப் பிரமாணங்கள். இவை தப்பிதமன்று. யாவற்றுக்கும் தர்மம் காரணம். தர்மத்தில்

யாவும் விளங்குகின்றன. அத்தர்மத்தினின்றும் பொருள், காமம், வீடுமுண்டாகின்றன. என்றிவ்வாறு மனைவி எனக்கோதியும் அவற்றைக்கேளாது யான் நாஸ்திகர்களுடைய பிரத்தியக்ஷப் பிரமாணமொன்றையே சொல்லும் அம்மார்க்கங்களில் முன் செய்த தீவினையால் எப்போதும் மிகவும் உண்மையாக எண்ணி விருப்பமுற்றவனுயினேன். கேளும் பிரமனே! இவ்வாறு நக்னமதத்தை அடைந்த என்னுடைய ஐசுவரியமும் நசித்து, அடிக்கடி குதிரைகளும், யானைகளும், ஒட்டகங்களும் கஷ்டமடைந்தன. இச்சமயம் பார்த்திருந்த சத்துருக்களால் எனது இராச்சியமும் பிடிபட்டது. பின்னர் உயிரொன்றுமே தப்பினுல் போதுமென்று திருட்டுமார்க்கமாய் இரவில், நகரத்திலிருந்து தொடர்ந்துவரும் எனது மனைவியுடன் வெளிப்பட்டு என்னைத் தேடும் சத்துருக்களறியாவண்ணம் வேதிய உருவத்துடன் வனத்திடைப் புகுந்தேன். அங்கு நாள்தோறும் கந்தமூலங்களைப்புசித்துக் காலம் கழித்துவரும்போது, பாக்கியவதியும், ஆபத்தினும் என்னை விடாது தொடர்ந்தவளுமாகியுள்ள என்மனைவி ஆயாஸமின்றி மரணமடைந்து கைலாயம் பெற்றனள். பிறகு இராச்சியத்தையும் மனைவியையும் இழந்ததினால் யான் நாள்தோறும் துக்கத்தால் வருந்தி, வியாதியினுல் துன்பமுற்று, மரணமடைந்து பயங்கர உருவமுள்ள யமபடர்களால் இழுக்கப்பட்டு, இரௌரவாதி நரகங்களில் தள்ளப்பட்டேன். அந்நரகங்களில் வரிசையாகவே துன்பத்தை அனுபவித்துப் பின்னர் இப்பூதலத்தில் ஒருஜென்மம் புழுவாயும், ஐந்துபிறப்புக் கோட்டானுயும், மூன்று ஜாதகம் வாயசமாயும், பின்னும் ஐந்து ஜெனனம் ஊர்ப்பன்றியாகவும் பிறந்து, பின்னர் தவளை உருவடைந்த நான் இப்பொழுது வாயஸத்தால் கொத்தப்பட்டு இப்புஷ்கரணித் தீர்த்தத்தினகண் விழுந்தமையாலும், உலகங்களுக்கு குருவாகிய தேவரீரைக் கண்டமையாலும் பாவம் விலகித் துறக்கம் எய்துகின்றேன். ஓ, பிரமாவே! சுகமாயிரும். ஓ, கமலாசனே! இவ்விதமாகிய பெரும்பேறு பூர்வ ஜென்மத்

தில் சிறிதுகாலம் செய்த சிவபூஜையின் மகிமையினலே எனக்குற்றவாறென்றுரைத்துப் பிரமனை வணங்கிப் பிரேம புட்கரணியைத் துதித்துப் பிரேமலிங்கத்தையும் தொழுது, அத்தேவபுருடன் தேவர்கள் துதிக்கக், கின்னரர்கள் பாடச் சிவபதம் பெற்றனன். இக்கேகயன் சாபத்தை நீக்கிய ஆச்சரியமான இவ்வத்தியாயத்தைக் கேட்கும் புருடன் இக த்தில் நீங்காத ஸம்பத்தையும், வித்தையையும், சற்புத்திர டந்துக்களையும் அடைந்து பின்னர் சுகமாகச் சிவபதத்தைப் பெறுவானென்று சூதமுனிவர் மற்றும் கூறத்தொடங்கினர்.

ஐந்தாவது அத்தியாயம் முற்றிற்று.

---

## 6—வது, பிரமன் துண்டிவிநாயகராகிய அத்தியாயம்.

பிரமனும் பிரேமபுட்கரணித் தடத்தில் இவ்வாச்சரியத் தைக்கண்டு, பின்னர் அத்தடத்திருக்கினேயதிக்கில் மஞே நிக்கிரகத்துடனிருந்து மகாதேவனும், இடவத்துவஜனுமா கிய சங்கரனை வரத்தைய மபயத்தையுமளிக்கும் திருக்கை களுடையவரும், முக்கண்ணரும், சூரியனையொத்து விளங் குகின்றவரும், கோடி சந்திரனை நிகர்த்தவரும், பிரசன்ன ரும், பேரழகுடையவரும், மான்மழுச் சூலமுதலியவைகளை வைத்து விளங்கும் பன்னிரண்டு திருப்புயங்களை உடைய வரும், அர்த்தசந்திரனைச் ஜடைக்கணியாய் உடையவரும், மேலான ஸர்ப்ப பூஷணங்களை உடையவரும், புலித்தோலா டை உடுத்தவரும், திருநீறு பூசிய திருமேனி உடையவரும் கருணை ததும்பும் கடைக்கண் பார்வை உடையவரும், ஸன காதி யோகிகளால் நன்கு துதிக்கப்பட்டவரும், இரயகமல பொகுட்டின் நடுவண் மாணிக்கச் சிங்காதனத்திருப்பவ ரும், மனத்தாலியற்றிய பதினறு உபசாரங்களால் பூஜிக்கப் பட்டவரும், எப்பொழுதும் இடப்பாகத்தமைந்த கௌரியு டன் விளங்குபவருமாக வெகுகாலம் தியானித்து முதலில்

உத்தமமந்திரமாகிய ஸாந்தம், யாந்தமாகிய இவ்விரண்டை யும் எப்பொழுதும் விளக்கும் பிரணவத்துடனே உச்சரித்து பிறகு பரிசுத்தமான பஞ்சாக்ஷரத்தை நூற்றெட்டு உருஜபி த்து, அதாவின் பிரேம விமர்சனத்தின் எழுந்தருளிய பிரேம மஹாலிங்கத்தையும், பிரேம விநாயகனையும் சிந்தித்து, பின் னர் பிரேம லிங்கத்தைத் தேன், நெய், சர்க்கரை, பால், கதலிக்கனி, பலாச்சுளைகளினுலும், பஞ்ச கவ்வியங்களா லும் ஸ்நானம் செய்வித்துப் பின்னர் சுத்த தீர்த்தத்தால் அபிஷேகம் செய்து மேன்மையாயும், மிருதுவாயுமுள்ள வெண்பட்டாடை சாத்தி, கற்பூரம், அகில், கஸ்தூரிகளால் கமழுஞ்சந்தனமாட்டி, மந்தாரம், அசோகம், புன்னாகம், கம லம், கலாரம், பாடலமென்னும் மலர்களாலும், ¶ கூவிளந்த ளிராலும், பொன் மலராலும் நன்றாய் அர்ச்சித்துத் தூர்ச் சடியாகிய அப்பிரேம புரோசருடைய திருமுன்றிலின் முக வில் அகிற்புகை ஊட்டிப், பசுவின் நெய்யால் தீபங்காட் டிப் பலவிதச் சிற்றுண்டியுடன் கூட்டிய மகா நிவேதனஞ் செய்து, கற்பூரநீராஞ்சனம்புரிந்து, பிரதக்ஷண நமஸ்காரங்க ளையும், பின் தாண்டவத்தையுஞ்செய்து பிரமன் சிரசில்குவி த்த கைகளுடன் உபநிஷதங்களால் துதித்து மற்றொன்றையுஞ் சிந்தியாத மனத்துடன் வெகுகாலம் தீவிரமான தவத்தைப் புரிந்தனன். பிறகு ஒருசமயத்தில், அவ்வேதாவைக் குறி த்து ஓர் ஆகாசவாணி எழுந்தது. ஓ. பிரமனே! சிவபெ ருமானது சடாமகுடத்துள்ள சந்திரனிடத்திருந்து இத்தட த்தில் அமுதம் வழிந்ததனுல் இத்தடத்துக்கு அமுதவாவி எனப் பெயர் வந்தது. இக்கௌரியை எவ்வருவத்தோடு நன்கு பூஜித்து ஜெகத்தைப் படைக்கும் வல்லமையை அடையப்போகின்றீரோ அந்தக் கஜாநன வடிவம் இதில் ஆடிய உடனே சந்தேகமின்றி எய்தும். ஆதலின் இதிலா டும் என்றுரைத்த அவ்வசரீரி மொழியால் வேதா கஜமுகக் கடவுளைத் தியானித்து அமுதமயமான அத்தடத்தில் ஆடி ஞர். மார்கழிமாசத் திருவாதிரை நாளில் எக்கணத்தி

¶ கூவிளம்=வில்லுவம்.

ஆடி எழுந்தனரோ அக்கணத்திலேயே கஜானன உருவத்தைக் கூடினாராயினர். அவ்வாறு கயானன உருவமடைந்து காந்திகொண்ட பிரமன் அப்போது தேவர்களுக்கிறையான பிரேமலிங்கத்தைத் தரிசித்துப் பிறகு அவருக்கு மஞ்சனமாட்டிப் பூஜிக்க பசுவின் நெய், தயிர், பால், நாளிகேரம் தேன், சர்க்கரை, கதளிக்கனி முதலிய பலவிதத் திரவியங்களையும், சுவர்ண கலசங்களில் எடுப்பித்த திரிவேணி தீர்த்தத்தையும், விரைவில் கொணர்ந்து தேவதேவனும், கருணாநிதியுமாகிய பிரேமலிங்கத்தை அபிஷேகம் செய்து, மேலான காவிரி முதலிய பல நதிகளின் நன்னீராலும் மஞ்சனமாட்டியும், பின்னர் சந்தனம் முதலிய வாசனைத்திரவியங்களாலும் திப்பிய வஸ்திர பூஷணங்களாலும் அலங்கரித்துப் பாரிஜாதம் முதலிய மூவுலகங்களிலும் உள்ள பலவித நன்மலர்களால் அர்ச்சித்துத் தேவதேவேசரும், உலகங்களுக்குக் கருணை செய்பவரும், ஜெகத்பதியுமாகிய அப்பிரேமலிங்கத்தை தூபதீபம் முதலிய எல்லா உபசாரங்களாலும் நன்குபூஜித்து மகா நிவேதனம் செய்து தாம்பூலாதி சமர்ப்பித்துக் கற்பூரம் எத்திக் காட்டிப் பெருந்தகமையுடைய அப்பிரேம புரீசனைத் துதித்து அங்கு விநாயக உருவத்துடன் வீற்றிருந்தனர். யாவருக்கும் அபீஷ்டத்தைச் சத்தியமாகக் கொடுப்பதனால் சத்தியவாசகனெனப் பெயரும், அன்றியும் உலகத்தில் நினைத்ததை சித்தி செய்தலில் அவருக்குச் சித்திவிநாயகர் என்றும் ஓர்பேரும் வந்துற்றது. அப்பொழுது பிரமன் தனது மற்றோர் அம்சத்துடன் யாகம் செய்யத்தொடங்கினர். அதுகாலே அச்செய்தி அறிந்த ஷாட்குணிய பரிபூரணரும், வீணை மீட்டும் விருப்பமுடையவரும், முனிகளில் சிறந்தவருமாகிய நாரத முனிவர் சத்தியலோகத்தை விரைவில் எய்தி அங்கு விளங்காநின்ற வாணியை நோக்காமலே காயத்திரி, சாவித்திரி சனை மாத்திரம் கண்டு உங்கள் கணவனாகிய பிரமன் பூவுலகில் சோம பட்டணத்தில் பரிமேத யாகம் செய்யத்தொடங்கினர். நீங்கள் சீக்கிரம் அவனடையுங்களென்றுரைா

க்க, அவ்விரு தேவிகளும் விரைவிலே பூலோகம் அடை
ந்தனர்கள். பின்பு அவ்வீணைமுனிவர் உடனே சரஸ்வதி
யின் சமீபமடைந்து ஓ வாணி! என்வார்த்தைதனைக்கேணி!
உன் கணவனாகிய மலரவன் பூதலத்திற்காவிரி தீரத்தில்
பிரேமபுஷ்கரணித்தடத்தில் விதிப்படித் தவத்தைமுடித்
துப் பரிமேதவேள்வியை நன்கு தொடங்கினர். சாவித்
திரியும் காயத்திரியும், உன்னை அழையாது மிகு ஆவ
லுடன் ஆங்கு விரைவின் எய்தினர்கள் ஆதலின், நீ சற்று
ந்தாமதியாதே என்ற வார்த்தையைக் கேட்டுக் கலைமகள்
கோபத்தால் உதடு துடித்துத் தனது யோகமாலையினால்
வேகமாக மகிதலத்துற்று, ஸ்ரீமத் பிரேமபுரியில் பிரமன்
சமீபத்தை அடைந்தனள். பின்பு காயத்திரியும், சாவித்திரி
யும், அதிவிரைவில் வரும்பாரதியைநோக்கித் தாங்கள் அவ
ளை அழையாதுவந்தபயத்தினால் தாழைமலரினும், கற்கமு
னிவர் ஆச்சிரமத்தினும் மறைந்தனர்கள். இவர்கள் மறை
ந்ததைக் கலைமகள் தன் ஞானக்கண்ணால் உணர்ந்து கோ
பமுற்று என்கண் விரோதிகளாக என்னை அழையாது இவ
ணடைந்த சக்களத்திகளுக்கு இடங்கொடுத்த ஓ, தாழை
யே! இத்தலத்தில் உங்கண் எக்காலத்தும் மலருண்டாகா
மற் போகுக. ஓ கற்கமுனியே! நீ வடதரு உருவேயாகுக
என்று தாழையையும், கற்கமுனிவரையும் சபித்துப் பின்
னர் காயத்திரியையும் நீ நதியுருவடைந்து ‡ காமசாரிணி
ஆகக்கடவாய் என்று சபிக்கத் தொடங்குகையில் மலரவன்
பாரதியை நோக்கிச் சிரித்து தனதகங்கையிலுற்ற பிரமகூ
ர்ச்சத்தை மாறுபடுத்த, அதனால் அப்பொழுது அவ்வெதிரி
விருந்த வாணியினுடைய வாக்கும் ஓ காயத்திரியே! நீ
நதியுருவடைந்து *நாமதாயினி ஆகக்கடவையெனமாறுபட்
டதை அறிந்த சரஸ்வதிதேவி வெட்கத்தால் தலைகுனிந்து
ஆச்சரியத்தையும், சினத்தையும் அடைந்தனள். இவ்
வாறு வெட்கமடைந்த வாணியைப் பிரமன் சமாதானம்
செய்து எனது முன்னிலையில் நீ உரைத்த வசனம் உன்

‡ காமசாரிணி—விருப்பிற்சரிப்பவள்.
* காமதாயினி—விருப்பையளிப்பவள்.

மையாகுக. இங்கு காயத்திரி நதி உருவடைந்து தன்னி லாடுபவர்களுக்கு விருப்பை அளிப்பவளாகுவாள். ஓ வாணி! உலகத்தில் காவிரிநதி எதுகாறும் பெருகுமோ அதுகாறும் இங்கு நான் களிக்கும் வண்ணம் நீயும் வெளிப்படுதலின்றி நதியுருவாகப் பெருகுவாய். சரஸ்வதியே அந்தர்வாகினி, காவிரியே கங்கை, காயத்திரியே யமுனையாகின்றதனால் இங்கும் திரிவேணி சங்கமம் என்பதில் சந்தேகமில்லை. ஸநாதனமாகியப் பிரேமலிங்கமே காசிவிசுவேசுவர லிங்கமாதலின் இத்தலம் தெக்ஷிண காசியென உலகத்தில் புகழ்பெறப் போகின்றது. இவ்வடதரு நிழலே அக்ஷய வடநிழல். இங்குப் புரியும் சிராத்தமே விசேஷமானது. நானே துண்டி விநாயகர். உன்னுடன்கூட இங்கு வசிக்கப் போகின்றனன். இச்சங்கமத்தில் ஆடுவோன் திரிவேணியில் ஆடுவோனே யாவான். இத் திரிவேணிக்குச் சரியான தீர்த்தமும், பிரேமலிங்கத்துக்குச் சரியான லிங்கமும், இப்பிரேமபுரிக்குச் சரியான ஸ்தலமும் மூவுலகங்களினுள்ளும் ஓரிடத்தும் இல்லை, இல்லை. இப்பிரேம வடதருநிழலில் பிதிரரைக்குறித்துத் திதியேனும், பிண்டதானமேனும், திலதருப்பணமேனும் புரிபவர்களுடைய பிதிரர்களுக்குப் பதினாயிரம் கயா சிராத்த பலனுண்டாகின்றது. இது திண்ணமே. உங்கள் மூவர்களுக்கும் சிநேகத்தையும் செய்வித்தனன். ஓ, வாணி! நீங்கள் மூவரும் சிரமமாகவே என்னருகில் வந்ததனால் இதுமுதல் இவ்வுலகில் உங்களுக்குச்சிநேகமே பொருந்துமென்று அவர்களைச்சமாதானம் செய்து வடதரு உருவாகிய இக்கர்க்கமுனிவர் சம்புவை நன்கு பூஜித்திருப்பார். இவ்வடதருவைப் பிரதக்ஷிண நமஸ்காரம் செய்பவனுடைய வம்சங்களும் இதனுடைய கப்புக்கிளைகள் போல விருத்தி அடையுமென்று உரைத்த தங்கள் கொழுநனாகிய மலரவன் வசனம் கேட்டு காயத்திரி, சரஸ்வதி இருவர்களும் தம் உருவத்தை இருவடிவாக்கி நதியுருவத்தையும் பெற்றனர்கள். இவ்வாறு காயத்திரியும், சரஸ்வதியும் நதியுருவோடும் காவிரியில் கல

ப்பதைத் துறக்கத்தில் *குலிசபாணி முதலாகிய எல்லாத் தேவர்களும், இருடிகளும் நோக்கித் துதித்தனர்கள். தேவர்கள் உரத்திக்கானம் செய்தனர்கள். மலர்மாரி பெய்தன. பூமியில் தாபதர்கள் உபநிஷத வாக்கியங்களால் துத்தியம் செய்தனர்கள். தனது மனைவிகளாகிய வாணியும் காயத்திரியும் தென்பூமியிலுள்ளவர்கள் முத்திபெறும் வண்ணம் தங்கள் உருவின் ஒரு கூறால் நதியுருப்பெற்று வெளிப்படாமலும், வெளிப்பட்டும் காவிரி நதியுடன் கலந்ததைக்கண்ணுற்றுப் பிரமனும் மிகக்களிப்புற்றனர். பின்பு ஒரு கூறால் விளங்குகின்ற வாணியையும், காயத்திரியையும், சாவித்திரியையும், பிரமன் நோக்கி ஓ, மனைவிகளே! காசியும், பிரேமபுரியுமே காக்ஷிபாகிய மோக்ஷத்திற்கு முதற்காரணமான ஸ்தலங்கள். இவ்விரண்டையும் விட்டு வேறு விரும்புகின்றவன் கரத்திற்கிடைத்த முத்திலையவிட்டு வேறுசித்தியைத்தேடுவோனாகின்றான். இவ்விமானம் புண்ணியங்களுக் கிருப்பிடமாதலின் புண்ணியாங்குர விமானமென்றும், பார்த்த அளவில் மனிதர்கட்கு இச்சித்ததைக் கொடுப்பதால் பிரேமவிமானமென்றும் கூறப்படுகின்றது. ஆதலால் யானும் இந்த சங்கரனைக் குறித்து பரிமேதவேள்வி செய்ய விரும்புகின்றேன். பூமிக்கண் இந்தலத்திற்கிணையாக ஒரு ஸ்தலமேனுமில்லை இல்லை. இங்கு மகம், தவம், சிவத்துக்குரிய பஞ்சாக்ஷராதி மந்திரவுச்சரிப்பு இவைகளைச்செய்பவர்கட்குப் பிரேமலிங்க மகிமையினால் ஸகல சித்தியும் உடனே கைகூடுகின்றதன்றோவென்று பிரமன் கூறினர். எனச்சூதமுனிவர் பின்னரும் புகல்வதாயினர்.

ஆறாவது அத்தியாயம் முற்றிற்று.

---

## 7-வது. பிரமன் மகம்செய்து சாபம்நீங்கிய அத்தியாயம்.

கேளும் நைமிசமுனிவர்களே! யாகஞ்செய்யவிருப்புற்ற பிரமன் சந்தோஷித்துத் திரும்பவும் வாணியைநோக்கி,

---

*குலிசபாணி—இந்திரன.

இப்பூவிற் காசி, பிரேமபுரி, காஞ்சி, அயோத்தி, துவாரகை, மதுரை, அவந்தி என்னும் இவ்வேழுபுரிகளும், மோக்ஷம் அளிப்பனவைகள். ஆதலின், இத்தலத்தின்கண் மிகு முயற்சியுடன் இப்பொழுது யாகம் செய்ய விருப்பற்றனென்று உரைத்த பிருகு முனிவர்முதலிய முனிவர்களை முன்னிட்டு வசந்தகாலத்தில், உத்தமமாகிய பரிமேதவேள்வி செய்யத் தீக்ஷித்து அவ்வுத்தமப் பரியை உபாத்தியாயர், ருத்துவிக்குகள், இவர்களோடும் பூவலம் செய்யவிடுத்து அது அவ்வாறு வலம் கொண்டுவந்ததற்பின் மறு வசந்தகாலத்தில் முன்னைத்தென்றிசைமுதலாகியதிக்குகளில், ஜோதிஷ்டோமம் முதலிய எழு கருமங்களையும், அப்படியே காலை மாலைகளிற்புரியும் பிரவர்க்கியம், உபஸத்து என்னும் கருமங்களையும் முறைபிறழாது புரிந்து சோமலதையையும் நன்கு அதித்து இருபத்தொரு *அரத்னி அளவுள்ள வில்வம், கருங்காலி, தேவதாரு, நறுவிலி என்னும் மரங்களால் ஆக்கிச் சாம்பூனதத் தங்கத்தால் அலங்கரிக்கப்பட்டுள்ள இருபத்தொரு யூபஸ்தம்பங்களைநட்டு, அவைகளில், முன்னூறு பசுக்களை பிணித்து சுவர்ணத்தால் செய்த பலசெங்கல்களால் சாஸ்திரத்தில், நன்குணர்ந்தவர்களால் தங்கமயமான அழகுள்ள கருடஉருவை அடுக்கொன்றக்கு அவ்வாறாக மூன்றடுக்கால் ஆக்குவித்து, அதன்மீது அத்துவர்யுவினால் வபாஹோமத்தைச் செய்வித்தன. பின்னர் அம்மகத்தில், அவ்வவர்க்குரிய தெய்வக்குறிப்புடன் அவர்களைக்குறித்து முறையாக உத்காதாக்களும், அழகாகச்சாமகானம் புரிந்தனர்கள். தங்கத்தாற் செய்யப்பட்ட சுருக்கு, சுருவம் முதலிய எல்லாப்பாத்திரங்களையும், மிகுந்த சுவர்ணம், முத்து இரத்தினங்களையும், தக்ஷிணையாகக் கொடுத்தார். கற்பகத்தரு, காமதேனுக்களால் அப்பரிமேதமகம் தரிசிக்கவந்தவர்களை சொர்ணமயமான கதலிஇலையில், அமுதம்போல உருசிகரமாகச் சமைத்த அன்னங்களாலும், நன்

---

* அரத்தி—சுண்டுவிர லொழிந்த மற்றைய விரல்களை மடக்கி அளக்கும் முழம்.

ருயலமைந்த பாயஸம்முதலான பக்ஷிய விசேஷங்களாலும்
திருப்தி செய்வித்த பின்னர் சந்தனதாம்பூல தக்ஷிணைகளு
மீந்து சந்தோஷிப்பித்தனர். இவ்வாறு பிரமன் செய்த
அவ்வுத்தமப் பரிமேதமகத்தில், யாவும் நன்றாய் முடிந்தன.
பிறகு பிரமன் தனது மூன்று பத்தினிகளொடும் வைசாக பூ
ரணையில், பைரவிவனத்திலிருந்து வந்து ஸப்தமுனிவர்களு
ங்கண்டு மகிழ அவபிருதஸ்நாநம் செய்துமுடித்த காலையில்
ஷாட்குண்ணிய பரிபூரணரும், சந்திரசேகரரும், அழகெ
ன்னும் அமுதத்திற்குக் கடல்போன்றவரும், மகேசானரும்
ஆகிய சங்கரரானவர், இடபமீதேறிக் கருணைததும்பும்
கடைக்கண் பார்வையுடையவரும், சர்ப்பமயமான ஆபர
ணங்களின் அரதனக்காந்தியினாற்சிவந்தவரும், கௌரிவல
துகை கொடுக்கட்புளகித்த சரீரமுடையவரும், பெரியவு
ருவுடைய கும்போதரனாற்பிடிக்கப்பட்ட சுவர்ணப்பிடி
யுற்று வெண்டாமரை யொத்து மிக விளங்கப்பெற்ற வெள்
ளைக்குடையின் காந்தி மிகுதியினால் அதிக சோபையுற்ற
திருமுகம்பெற்றவரும், தெய்வமகளிர்வீசும் இரட்டைக்க
விரிக்கிடையுற்று சரற்காலமேகமண்டலங்களுக்கிடையில்,
பூர்ணகலையுடன் கூடிய சந்திரன்போல விளங்கும் வெண்
குடையின் நடுவுற்று சரற்கால சந்திர கிரணங்களைப்பெ
ற்ற உதயகிரிபோல விளங்கும் திருமுகங்களுள்ளவரும்,
வரநதியின் அலைகளால் நனைத்த ஜடாமுடியினை யுடைய
வரும், பாதாதிகேசமளவும் நன்குமலர்ந்த உத்தமயோகிக
ளுடைய கண்களென்னும் தாமரைமலர்களாற் பூசிக்கப்படு
பவரும், சர்ப்பகுண்டலங்களால் அலங்கரிக்க விளங்குப
வரும், தூரத்தில் வைக்கப்பட்ட கிரீடங்களோடும் நழு
விய மந்தாரமாலையுடைய மகேந்திரன்முதலிய தேவர்களா
லும் திக்பதிகளாலும் தூரத்தினின்று சேவிக்கப்படுகின்ற
வரும், தமது சடையில்விளங்கும் வாசுகியினது படமண்ட
லங்களின் அசைவாகிய வேடிக்கையைப் பார்க்கும் உத்
தமமுனிவர்களால் ஆனந்தித்து நன்கு துதிக்கப் பெற்ற
வரும், அவ்வவர் அதிகாரத்துக்குத் தக்கபடித் தனித்தனிக்

கைகளிலெடுக்கப்பட்ட ரத்நக்கெண்டி, கலசம், சருட்டி, ஆலவட்டம், மகரதோரணமாதி விருதுசாமான்களை எடுப்பித்துவரும் பூதகணங்கள் நாற்பாலும்சேர்ந்து வரப்பெற்றவரும் ஆனந்தபரிதர்களான வேறு பல பூதகணங்களால் தலையிற்குவித்த கரங்களுடன் ஜயஜயவென்று திக்குகளெங்கும்பரவ உரத்துத்துதிக்கப்பட்டவரும், தமது நாமாங்கிசர்களாகிய சிவபக்தர்களால் நாற்புரத்தும் சேவிக்கப்பட்டவரும், நான் முந்தினேன் நான் முந்தினேனென்று தரிசிக்கவந்த தேவகந்தர்வ கின்னரர்களைப் போமின் போமின்களென்று கிந்து எங்கும்பரவ உரைக்கும் இரத்தினவேத்திரபாணிகளாகிய நந்திபிருங்கி முதலியவர்களால் பக்கத்தில் சூழப்பெற்றவரும், பிருகசாரணியும், ஆகாயவாசிகள் மதிக்கும் வண்ணம் உக்ஷவிடையின் காற்குளம்பாற்கிளம்பிய தூளியுடன்கலந்து ஆகாசத்திற் பரவும் மெய்ந்நீற்றுப்பொடியினையுடையவருமாக சித்தர் மன்னர் கந்தர்வகின்னரர்கள் மந்தாரமுதலிய மலர் மழைபொழியவும் பேரிமுதலியவாத்திய கோஷங்களுடன் சுருதிகூட்டித் தந்திரிமீட்டிக் கானம் செய்யவும், அரம்பை முதலிய அரமகளிர்கள் முறைப்படி நடனம் புரியவும், வல்லவராகிய தும்புரு, நாரதர்கள் மேலான வீணாகானம் புரியவும் பிரமன் களிகூர்ந்து தரிசிக்கக் காக்ஷி கொடுத்தனர். பிறகு திப்பிய மங்களவடிவுடைய மகாதேவனைக்கண்டு ஆனந்த பரிதராகி உசதுர்முகவேதாவும் சிமிட்டாத இமைகளுள்ள தனதுகண்களால் அத்தேவதேவரது திருவழகென்னும் அமுதப்பெருக்கை அருந்தித் தெவிட்டாது முதலில் சென்னிகளால் வணங்கி மேலான பக்தியோடு துத்தியம் செய்யத் தொடங்கினர். சித்துருவாயும், அகில உலகங்களுக்கும் சாக்ஷியாயும், முக்தியுருவாயும், பசுபதியாயும் உள்ள உம்மை வணங்குகின்றேன். தேவர்களால் அறியத்தகாதவரும் மனதுக்கெட்டாதவரும், எங்கும் நிறைந்தவரும், நிஷ்களருமாகிய உம்மை வந்திக்கின்றேன். உலகத்தைப் படைப்பதிலும், அழிப்பதிலும், காப்பதிலும் முக்கியருமாகிய உமக்கு

நமஸ்கரிக்கின்றேன். உலகத்தை ஒருவராக வகிக்கின்ற
உமக்கு வந்தனம் செய்கின்றேன். உம்முடைய மாயையி
னால் இந்த எல்லா உலகங்களையும் படைத்துச் சிவரூபியாகி
அதனோடு நன்றாய்ப் புகுந்திருந்து பலவிதப் போகங்களை
யும் புசிப்பவர்போன் றபிநயித்து உலகத்திற்கு முக்கிய
சாட்சியாயுமுள்ள உம்மை வணங்குகின்றேன். உபநிடத
மாகும் தாமரையிலும், புண்ணியவான்களுடைய சைத்தா
மரையிலும், யோகிகளுடைய மனத்தாமரையிலும், இச்
சைப்படி மிகக் களிப்புடன் விளையாடுகின்றவரும், கீழான
வரும் மேலானவரும் ஆகிய உம்மைப் பணிகின்றேன்.
பூதகணங்களுக்குப் பதியும், புரமெரித்தவரும், பசுபதி
யும், ஹாலாகல விஷத்தைக் கழுத்தில் வைத்தவரும், மனோ
கர வடிவுடையவரும் ஆகிய உம்மை நமஸ்கரிக்கின்றேன்.
பிரபுவே! தத்துவங்களுக்கெட்டாதவரும், சோதியுருவின
ரும், முப்பத்தாறு தத்துவ உருவினரும், சித்தியை அடை
யும் யோகிகளுக்கு ஆறாதாரங்களின் சித்திகளைக்கொடுப்ப
வரும், மனதில் நற்பக்தியுள்ளவரிடத்துப் பிரீதியுடையவ
ரும், வாக்குக்கும் மனதுக்கும் தூரத்திருப்பவருமாகிய உம
க்கு வணக்கம் புரிகின்றேன். முக்குண வடிவினரும்,
பிரம, விஷ்ணு, சிவரூபியும் அவர்கள் உற்பத்திக்குக் கார
ணரும், நிர்க்குணரும், மேலான உருவினரும், நன்குணரத்
தக்கவரும், சநாதவருமாகிய சொருபத்தை உடையவரும்,
மேலான சூக்ஷ்ம உருவினருமாகிய உம்மை வந்திக்கின்
றேன். ஓங்கார உருவினரும், நாதப்பிரம வடிவினரும்
ஆகிய உமக்குப் பணிகின்றேன். பிரணவத்திற்றோன்றிய
ஐம்பதக்ஷர வடிவினரும், அவ்வக்ஷரங்களில் தனித்தனி
வடிவினரும், ஐம்பது சத்திவடிவினரும், பதினாறுவித ஆத்
ம உருவினரும், முப்பத்திரண்டறங்கட் கிடையிருப்பவரு
ம், முப்பத்தாறு தத்துவ உருவினரும், ஸ்தூல உருவினரு
மான உமக்கு வந்திக்கின்றேன். எல்லா அண்டங்களை
யும் நாசம்செய்து யாமே பிரளய கால சொரூபி என்று
கூறி, திருத்தாண்டவம் புரிகின்றவரும், பின்னரும் ஒருக்

கால் நானாவித பூதலத்திற் பிரபஞ்சங்கள் ஜீவேசுரர்களையும் உண்டாகுக என்று சிருஷ்டிக்க விருப்புற்றவரும், அந்தர்யாமியாய் உட்புகுந்து பலவித பிரபஞ்சங்களையும் படைத்து தத்தங்கருமங்களில் முயல்விப்பவருமாகிய உம்மை வணங்குகின்றேன். திருவடித் தியானத்தால் பரிசுத்தமான முனிவர்கள் மனத்தாமரைக்கண் உருவும், நாசமுமற்று மேலிடமாயுள்ள பேரொளியே வடிவாக அடிக்கடிப் பார்க்கும் உம்மைச் சரணடைகின்றேனென்று இவ்வாறு உடல்புளகிக்க மனமுருகி ஆநந்தக்கண்ணீர் பெருக நாத்தழுமாறித் துதித்த பெருமை தங்கிய பிரமனைக் கண்டு சந்தோஷமடைந்தவரும், ஷட்குணமய பரிபூரணருமாகிய சம்புவானவர் மேல்வருமாறு சுபவசனங் கூறுவாராயினர். நல்விரதமுடைய ஓ, பிரமனே! உனது இந்தத் துதியாலும், நீ புரிந்த மகத்தாலும், தவத்தாலும் நாம் பார்ப்பதியொடும் சந்தோஷித்தோம். விரும்பியதைக் கேள் என்றுரைத்த சம்புவினுடைய அமுதமய வாக்கை ஆதரவுடன் வினவிப் பிரமன், அஞ்சலி புரிந்த சிரத்தினராய் அவரிடத்துத் தெரிவிக்கின்றனர். ஓ, பகவானே! ஆகாயம் முதலிய காணப்படுவதெல்லாம் உம்மிடத்திருந்து உண்டாகியது. நீரே சராசர வடிவமான உலகப் படைப்பென்னும் பாரத்தை என் கண்ணும், உலகம் காத்தலென்னும் பாரத்தை தாமரைக் கண்ணன் கண்ணும், உலகமழித்தலென்னும் பாரத்தை உருத்திரன் கண்ணும், குணக்காதித் திக்குகளை பாலிக்கும் பாரத்தை இந்திராதி திசாநாதர்கண்ணும் வைத்தீர். உம்முடைய உத்திரவின்படியே சந்திர சூரியர்களிருவரும் மாறி மாறியுதித்து இரவு பகலென்னும் காலத்தை விளக்கி வருகின்றார்கள். இவ்வாறே மற்றெல்லாத் தேவர்களும் உமது திருவருளின்படியே தத்தமக்கேற்பட்ட கருமங்களைச் செய்துவருகின்றார்கள். இப்பொழுது உம்முடைய கடைக்கண் சிவப்பால் என்னை விட்டு நீங்கிய சிருஷ்டித் தொழிலென்னும் பாரத்தைத் தேவியோடும் கூட தாமே திரும்ப எனகண் வைக்க வேண்டுகின்றேன். ஓ, நாதனே!

கருப்பத்திலிருக்கும் சிசுவினது பாததாடனம் தாய்க்கடரு
சமாகாதே என்று வேண்டிய பிரமனைநோக்கித் தேவேச
ராகிய சிவபெருமான் நீ விரும்பியவண்ணமாகுக என்றுஉ
ள்ளக்களிப்புடன் உரைத்து, பார்வதி சந்தோஷிக்கும்படி
ச்சதுரானனனாகவே ஆகுகவென் றுரைத்தனர். பூதேசர்
இவ்வாறுரைத்த காலையில், ஆகாயத்திலிருந்தும் மலர்மாரி
பெய்தது. *குடிலையும், நான்குவேதங்களும் பிரமனை அடை
ந்தன. சனகாதிகளான எல்லாமுனிவர்களும் வணங்கினர்
கள். தேவகந்தர்வகின்னரர்களும், தும்புருவும் கானம்செ
ய்தனர்கள். இந்திராதி உலகபாலர்களும் பிரமபதம் பெற்று
சராசரப்படைப்பைப் புரியுமென்று கமலாசனனை வணங்
கினார்கள். உலகத்திற்குச் சுகத்தைச்செய்யும் பிரமனுக்கு
வரமளித்த சங்கரரும், அங்கிருந்தவாறே சனாதனமாகிய
பிரேமலிங்கத்தில் விரைவில் மறைந்தருளினர். பின்னர்
பத்மாஸனனும் ஆகாசவீதியில், சுரர்குழாம் துதித்துச் சூழ்
தரத் தேவர்களால் பூசிக்கப்பட்ட பிரமபதவியை அடை
ந்து எப்பொழுதும் ஸ்ரீமத் கேதகிவனநாதனைத் தனதுள்
ளத்திருத்தி முன்போல் உலகம் படைத்துவந்தனன். அப்
பிரமன் பரிசுத்தனை அயமேதம் புரிந்த அந்த இடத்தில்
பிரமக்குண்டப் பெயருள்ள ஒரு தீர்த்தமும், அவ்விதாதவி
ன் முன்னர் சரஸ்வதி வெளியிற் றோன்றுமது நதியுருவாகி
ய இடத்தில் சாரஸ்வதமென்னும் பெயருள்ள ஓர் தீர்த்த
மும் உண்டாயிற்று. பிரமனால் வடதரு அருகில்
அக்குண்டக் கரையில் பிரேமலிங்கப் பெயருடன் ஸ்தா
பிக்கப்பட்ட அச்சோபன லிங்கத்தை, அப்புண்ணியதடத்
தில் மூழ்கி அர்ச்சிப்பவனுக்குப் பல மகங்களாலும், பலவே
று தீர்த்தங்களாலும் ஆகவேண்டுவது என்னை. பங்கயனு
டைய சரித்திரமாகிய இவ்வத்தியாயமொன்றையே சிரத்
தையுடன் படிக்கின்றவன், படிக்கச்செய்கின்றவன், கேட்
போனாகிய இவர்களது மனத்தாமரையென்னும் தகராகாச
த்தில் தயாளுவாயும், அளக்கரிய மகிமையுள்ளவராயும்

---

* குடிலை—பிரணவம்.

வேண்டியவெல்லா மளிப்பவராயுமுள்ள ஸ்ரீ சாம்பமூர்த்தி விளையாடுவாரென்று கூறிய சூதமுனிவரை நோக்கிப் பின்னரும் கேட்பாராயினர்.

ஏழாவது அத்தியாயம் முற்றிற்று.

---

## 8-வது, திருமால் பூசித்த அத்தியாயம்.

ஓ, சூதமுனிவரே! ஸ்ரீமானாகிய புருடோத்தமன் விளங்காநின்ற சனாதனமான பிரேமலிங்கத்தை யாதுகாரணம்பற்றிப் பூசித்தனர், அதனையும் எங்கட்குரையுமென வினவிய நைமிசமுனிவர்களைப் பார்த்துச் சூதர் சொல்லுவாராயினர். ஓ இருடிகளே! பூர்வத்தில, பங்கயசக்ஷணரான விஷ்ணு உபேந்திரனாகஜெனித்து மகாபலியின் மகச்சாலைக்கண் மூன்றடிமண் யாசித்து அம்மகாபலியை அடக்கி, இம்மூவுலகத்தையும் வலாரியான இந்திரனை அடைவித்தனர். பின்னர் ஒருகாலத்தில், பாதாளவாசிகளான எல்லாவசுரர்களும் அதிக வலியுடையவர்களாகி, சிறந்த சுவர்க்கலோகத்தை வளைந்தனர்கள். திருமாலானவர் கோடிசூரியர்ஒத்திலங்கும் பெரிய சக்கராயுதத்தை எடுத்து எல்லாத்தைத்தியர்களையும் சிங்கமானது முயற்குட்டிகளை வெருட்டுவதுபோன்று வெருட்டினர். சமர்த்தராகிய விண்டுவினால் துரத்தப்பட்ட அவ்வெல்லாத்தனுசர்களும் விரைவில் பிருகு மனைவியிடம் சென்று சரண் அடைந்தனர்கள். அத்தேவி அவர்களை அக்கினி கோத்திரக்கிரகத்தில் மறைத்துவைத்துச சிடராகியவவர்களைக் காக்கும் வண்ணம் வாயிலின் நின்றனள். பின்னர் விஷ்ணுவானவர் ஆங்செய்திப் பார்க்கவியைநோக்கி, ஓ தேவி! இங்கு வந்த தனுசர்கள் எங்கொளித்தனரென்று வினவினர். மிகு பலமுற்ற அச்சுதன் வார்த்தையைக் கேட்டுப் பிருகுமனைவி அவருக்குப் பூசைபுரிந்து அவரை நோக்கி, ஓ உபேந்திரனே! அவ்வசுரர்கள் எங்கு ஒளிந்தனர்களோ யான் அறியேன் என்றனள். அவர் திரும்பவும் அத்தேவியை நோக்கி, அவ்வசுரர்கள் இங்ஙனே இருக்கின்றனர்.

இப்பொழுது அவர்களைக்கொல்லவிரும்பிய, எனக்குவழி விடென வுரைத்தனர். பார்க்கவிதேவி திரும்ப அவ்வச னங்கேட்டு உதடு துடிக்கச்சினந்து உலகிலிந்திரனில்லாமற் போகுதலைவிரும்பிச் சக்கிரபாணியான அவருக்குவழிவிட வில்லை. ஆதலின், விண்டுவானவர் முனிந்து சக்கரத்தால் அவள் சிரத்தைத் துணித்தனர். பின்னர்சுவாலாமாலையோடு தோன்றி, தன்னருகில்வந்த ஸ்திரீஹத்தியைப்பார்த்துக் கரு டச்துவசன் தீவிரமான உங்காரஞ்செய்ய வதனு லவ்வத்தி த டைப்பட்டுநின்றது. இச்செய்தி விறவும் பிருகுமுனிவர் கோபத்தாற்கலங்கி உலகங்களைக்கொல்ல, அவ்வத்தியை யெழுப்பி மீளவும் விடுத்தனர்: அவரேவலின்படியே அது வுலகங்களைத்தகித்தது. பிறகு தேவ கந்தருவ கின்னர உர கர்கள், பிரமனை முன்னிட்டு, திருப்பாற்கட லடைந்து, ஸ்ரீபூமியுடன் கூடினவரும், விபுவுமாகிய பத்மநாபனை ஆயி ரம் படங்களுள்ள வாதிசேடனுடலில் யோகநித்திரைசெய் பவரும், மலர்மகள், புவிமகளிர்களுடைய தாமரையொத்த த்திருக்கைகளால் வருடுந்திருப்பதங்களை யுடையவரும், காக் குந்திறமுடையவருமாகிய ஸ்ரீமானே! உமதுதிருவடிக்கண் சரணமடைந்த எங்களிடத்திற் கருணாரஸம் பொருந்திய கடைக்கண்பார்வையைவைத்தருளும் என்று துதித்து எங் குஞ் சயம்பொருந்திய கோவிந்தரிடத்து உலகுற்ற துன்பத் தைத்தெரிவித்தனர்கள். உம்மா லேற்படுத்தப்பட்ட தரு மசேதுவானது உம்மாலேயேபேதிக்கப்படுகின்றது. பெண் கொலைபுரிந்து மவ்வத்தியைத்தள்ளிவிட்டீர். அவ்வத்தியும் பிருகுவி னேவலினு லிப்போது எல்லாவுலகங்களையும் பிர ளயகாலாக்கினிபோலும், ஊழிக்கனலும ஒத்துத் தகிக்கின் றது. ஓ, விபுவே! தேவரீர் இதனை யுபேக்ஷிக்கின்றீர் யா தொரு பரசிவத்தின் ஆணைக்குப் பயந்து வாயுவானவன் வீசுகின்றனனோ, சூரியன் தகிக்கின்றனனோ, இந்திரன், அக்கினி, யமன் இவர்கள் தத்தந்தொழிலைப் புரிகின்றன ரோ, அப்பரசிவ வுருவான உம்மாலேயே யவரது ஆணை தள்ளப்படுமாயின் உயிர்கள் தத்தமக்குரிய கருமங்களில்

எப்படி நிலைபெறுவார்கள். கடலும் கரைகடந்து ஜலத்தா
லுலகத்தை முழுகுவிக்கும். சந்திர சூரியர்களும் ஆகாய
த்தில் உதயாஸ்தமனங்களைச் செய்யார்கள். தருமத்தை
விதிக்குஞ் சுருதி ஸ்மிருதிகள் உம்முடைய ஆக்ஞையே.
எல்லாச் சகத்துக்குந் தருமங் காரணம். யாவுந் தருமத்தில்
விளங்குகின்றன. அத்தருமத்துக்கு நீரே காரணம், அது
ஸநாதனமானது. ஆதலின், அத்தருமசேதுவை நன்கு கா
க்கும் வண்ணம் உம்மாற் செய்யப்பட்ட இந்தப் பெண்பழி
யை ஏற்றுக்கொண்டு, அதனைத் தேவரீர் தவத்தால் விரை
வில் போக்கும். சத்துக்களால் எது செய்யப்படுகின்ற
தோ அதனை உலகஞ் செய்கின்றதென்று உரைத்த தேவர்
வசனங்கேட்டு, ஸ்ரீமனும் சநாதனுமாகிய புண்டரீகா
க்ஷன் அவர்களை அழகிய கடைக்கண்ணாற்பிரேமையுடன் பா
ர்த்துச் சொல்லுவாராயினர். ஓ. தேவர்களே! இப்பழியை
நீக்குமாறு மனோஹரமான எந்த இடத்திலிருந்து நான் தவ
ம்புரியலாம். அப்படிப்பட்ட மேலான இடத்தைச் சொல்
லுங்கள். சுகத்தை விரும்புகின்றவர்கள் கருமலோகத்தி
லல்லவா கருமங்களைப் புரியவேண்டும். ஆதலாற் கன்ம
பூமியாகிய சிலாக்கியமான நாவலந்தீவில், மிக மங்களகர
மாகிய ஓரிடத்தை யோசித்துக் கூறுங்கள். அதுவே நாம்
விரும்பத்தக்கதாகும் என்ற அப்பகவானது வசனங்கேட்டு,
அமரர்கள் இதனை எடுத்துப் புகல்வாராயினர். ஓ, பகவா
னே! எல்லா ருதுக்களினும் மனோகரமாயும், புண்ணிய
மீவதாயுமுள்ள காவிரிவடகரையில் திருவரங்கஸ்தலத்தின்
குணதிசையில், பஞ்சநதஸ்தலத்தின் குடதிசையில், பிரேம
புஷ்கரணிக் கரையில், ஸநாதனமாகியும், திவ்வியமாயுமு
ள்ள பிரேமலிங்கப்பெயருடன் எழுந்தருளி முனிவர் குழா
ங்களாற் சேவிக்கப்பட்ட ஸ்ரீமத் பிரேமபுரமென்னும் மே
லானஸ்தலத்தைத் தேவரீர் விரைவிலெய்தி, உலகங்களை
ஆதரிக்கும்நிமித்தம் பிரேமபுஷ்கரணித் தடத்தில் தவம்புரி
ந்து, பிரேமமகாலிங்கத்தை நன்குபூசித்து, இராகுவினால்
விடப்பட்ட நிசாகரனைப்போல ஹத்தியினால் விடப்பட்டு,

ஸ்ரீ பூமிதேவிகளாற் சேவிக்கப்படும் அழகிய உருவத்தை, இவ்வாறே யடைந்து, அத்தலத்தில் அனந்தசாயியாக எங்கட்குத் தரிசனங் கொடுத்தருள வேண்டுமென்று நன்கு துதித்து வேண்டிக்கொண்ட அவர்கள் வசனங்கேட்டு, ஸ்ரீநாதன் அமுதம்போன்ற வாக்கினாலே நாம் அப்படியேசெய்கின்றோம்; நீங்கள் பயமற்றவர்களாவீர்களென்று அத்தேவர்களைப்பார்த்துக்கூறிக் கருடத்துவஜனான ஹரியானவர் சனகாதிமுனிவர்கள் துதிக்கவும், உத்தமமுனிவர் சேவிக்கவும், பிரமபுரிஸ்தலமடைந்து, பின்னர் புண்ணியமளிக்கும் பல தருக்களால் விளங்குவதும், சருகு, நீர், காற்று இவைகளைப் புசிக்கும் முனிவர்களாற் சூழப்பெற்றதும், வாயுவினாலெறியப்பட்ட திருக்காவிரித் தீர்த்தத் திவலைகளாற் பரமசாந்தியையுடையதும், காதுகட்கினிமையாய்க் கூவும் குயில்களாலும், கண்கட்கினிமையாய் நடிக்கும் மயில்களாலும் விளங்குவதுமாகிய பிரமபுஷ்கரணித் தீரத்தின்கட் சென்று, அதன் பச்சிமத் திசையில் தவம்புரிந்து, வடதரு மூலத்தில் ஏகமாய்த் தானேவிளங்கும் சந்திரசேகரனை நன்றாகப் பூசித்து பிருகு மனைவியாலுற்ற பழியினின்றும் விடுபட்டுக் கோடிமன்மதர்களுடைய அழகு என்னும் அமுதப் பெருக்கிற்குச் சமுத்திரமாகி, ஸ்ரீ பூமிகளுடன் அத்தலத்தின்கண் விளங்கினார். பிறகு தேவ கந்தருவ சித்தர் உத்தமமுனிவர்கள் யாவரும் பிரமனை முன்னிட்டுத் தேவதேவராகிய அந்த ஹரியை வணங்கினார்கள். அதுமுதல் அத்தலத்தில் ஷட்குணமய பரிபூரணரான புருஷோத்தமர், இலட்சுமி பூமிதேவிகளின் திருக்கைகளால் வருடப்பெற்ற திருவடிக் கமலங்களையுடையவராகிச் சேஷசயனத்தில், மனிதர்களுக்கு வரத்தை யளிப்பவராகி விளங்குகின்றனர். பிரமலிங்கப்பிரியரும், ஆதிதேவரும், அம்புஜாக்ஷருமாகிய ஸ்ரீரங்கநாராயணரை அப்பிரமபுஷ்கரணித் தீர்த்தத்திலாடி வணங்குகின்றவர்கட்கு கெர்ப்பவாசம் நீங்கும். ஓ, முனிவர்களே! சுகமாய் அத்தலத்தின் கண்ணுள்ள எந்நீரும் கங்கா தீர்த்தமே. சிலைகள்யாவும் லிங்கங்களே. மனிதர்கள் யாவ

ரும் முனிவர்களே எல்லா மரங்களும் கற்பகத்தருக்களே, எப்பறவைகளுந் தேவர்களே. அங்கு வசிக்கும் யாவர்களும் புசித்தல் சிவபிரானுக்கு நிவேதித்தலும், சயனித்தல் சமாதியிலிருத்தலும், பேசுதல் ஜபம் புரிதலும் ஆகுமென்று கூறிய சூதமுனிவரை நோக்கிப் பின்னும் நைமிசமுனிவர் பேசுவாராயினர்.

எட்டாவது அத்தியாயம் முற்றிற்று.

---

## 9-வது, இந்திரன் பூசித்த அத்தியாயம்.

ஓ, சூதமுனிவரே! முன்னன் இந்திரன் பிரேமலிங்கத்தை யாதுகாரணத்தால் பூசித்தனனோ அதனையும் கேட்க விருப்பற்ற எங்கட்குச் சொல்லுமென்ற நைமிச முனிவர்களைப் பார்த்துச் சூதமுனிவர் பேசத்தொடங்கினார்.

ஓ, முனிவர்களே! ஒரு காலத்தில் வாற்சல்வியர் முதலிய தனுசர்களுடன் சமராடித் தோற்ற இந்திரன் மனநடுங்கி, மகாரதனாகிய முசுகுந்தசக்கிரவர்த்தியைப் பூதலத்தினின்று வினாவிலழைத்து, அவ்வசுரர்களுடனே பொருதுவித்தனன். அவ்வரசனு லசுரர்யாவரும் யுத்தத்திற் றோற்று நாசமடைந்தனர். அதுகண்டு சந்தோஷித்த இந்திரன் முசுகுந்தசக்கிரவர்த்தியை அர்த்தாசனத் திருத்தி மணிக்குவையின் அபிஷேகஞ்செய்து அவ்வரசனை நோக்கி, ஓ,மேலான முசுகுந்த சக்கிரவர்த்தியே! நீர் எனது சத்ருக்களை வெற்றிகொண்டமையால் இப்போது உம்மிடத்தில் அன்புற்ற என்னுடைய ஐராவதம், பலசுவர்ணசலாகையினால் விளங்கும் வெண்குடை இதுகளை நீக்கி, வேண்டுவதைக் கேளும் அதனை உமக்கு நிச்சயமாய் அளிக்குவனென்றனன். அதுகேட்ட சக்கிரவர்த்தி அவ்வாறேயாகுகவென்றுகூறிச் சந்தோஷித்து உடன் தனது விடுதி சென்று, பின்னர் இராத்திரியில் நன்றாக நித்திரை புரிகையில அவனது சொப்பனத்தில் மஹேசானரும், மகாவிபவம், தயாநிதியுமான தியாகராஜர் எழுந்தருளி அரசரேறுகிய முசுகுந்தனே! இந்திரனை

வன் புராதனமாகிய என்னைத் திருமாலினுடைய ஹிருதய கமலத்தினின்றும் மிகு தவத்தினால் அடைந்தும், தான் இந்திரனாயிருக்கும் கருவத்தினால் இப்போது மறந்தனன். அறிவீனனாகிய அவ்விந்திரன் யாது காரணத்தினால் இராஜ பூஷணங்களை யெல்லாந் தந்துடை, ஐராவதங்களை யொழித்து வேண்டுவதைக் கேள் தருகிறேனென உறுதியாகமொழிந்து எனனை மறந்தனனோ அதனால் நீ அப்புரந்தரனிடத்திலிருந்து என்னையே கேள், நான் பூமியிற் கமலாலயத்தில் உன்னாலே ஸ்தாபிக்கப்பட விரும்புகிறேன். அவ்விந்திரன் உன்னை வஞ்சித்துவிடுவான், அதற்குள்ளாகாமல் செங்கழுநீர்மலர்வாசம் நீங்காமலும், பாதத்தி லசையும் வீரக்கழல் பொருந்தியும், விளங்குகின்ற விடங்கமூர்த்தியையே பெற்றுக்கொள். இவ் வடையாளமில்லாத வேறு மூர்த்திகளைப் பெறுதே, என்றுரைத்தருளி மறைந்தனர்.

இவ்வாறு சொப்பனங்கண்ட அவ்வரசன் உடல் புளகிப்ப ஆச்சரியமுற்றுப் படுக்கைவிட்டெழுந்து, காலைக்கடன்களை முடித்துச சந்தோஷத்துடன் சுதன்மை யெனனும் தேவசபையை யடைந்து ஓ, சகோதரனே! நீர் சந்தோஷித்து எனக்கு முற்கூறிய அவ்வார்த்தை சத்தியமேயாகுக, வேறு பண்ணுகிர் என்று உறுதிப்படுத்திக்கொண்டு உமது மங்களகரமான வீட்டில நீர் தினந்தோறும் ஆராதித்துவரும் தியாகராஜப்பெயருள்ள பரசிவனை எனக்கு இப்பொழுது அளியுமென உரைத்த இவ்வசனங் கேட்ட சதமகன் பயத்தால் மனங்கலங்கி அத்தியாகராஜ விக்கிரகத்தைப் போலே எழுவிக்கிரகங்களைச் செய்து, ஒவ்வொன்றினையும் வரிசையாகக் கொடுக்க, இதுதன் றிதுதன்றென்று அவைகளைத்தள்ளி சௌசந்திகவாசனையுள்ள சருதநராகிய தியாகராஜனைப் பெட்டியுட னெடுத்துத் தேவேந்திரன் மசீந்திரனுக்குக் கொடுக்கத் தேவோத்தமரும், பிரமாதிகளால் துதிக்கப்பட்டவருமாகிய வத்தியாகராஜமூர்த்தியை முசுகுந்தன் மனக்களிப்புடன் பெற்றுத் தலைக்கண் தாங்கிச் சுவர்க்கத்தினின்றும் பூதலத்தை அடைந்தனன். அப்பொ

மூது மகாதேவராகிய தியாகராஜர், ஓ, இந்திரனே! யாது
காரணத்தால் ஐசுவரிய மதத்தினால் மோகமுற்று ராஜபூஷ
ணங்களான ஐராவதம், வெண்குடை இவைகளை கொடுக்
கத்தகாதவையென் றெண்ணி என்னை மறந்தனையோ, வெ
குகாலமாயுள்ள குலதனமாகிய என்னை இவனுக்களித்தனை
யோ, அதனால் நீ சண்டாளனாகி அறிவழிந்து பூதலத்தை
அடைவாயென்று சபித்தலுமிந்திரன் சண்டாளஉருவெய்தி
னன், உயர்ந்த மஹாவிபுவாக விளங்குகின்ற தியாகராஜமூ
ர்த்தியை அங்கு ஸ்தாபித்து உயர்ந்த மதில், கோபுரம் முத
லியவைகளைக் கட்டுவித்து, ஆசாரோகணத்தை முன்னிட்
டுத் திருவிழாவையுஞ் செய்துவித்தனன். சண்டாளவுருவ
டைந்த தேவராஜன் துறக்கத்தினின்றும் பூதலத்தை யடை
தலுந் தேவர்கள், சுவர்க்கம் அரசழிந்திருப்பதைக்கண்டு,
பயங்கொண்டு தங்கள் ஆசிரியராகிய குருவை யடைந்து,
ஓ,பகவானே! எங்கள் அரசன் குலதெய்வமாகிய தியாகராஜ
ரை மறதியா லிழந்து, அவரது சாபத்தாற் சண்டாள வுரு
பெற்று விண்ணாடுவிட்டு மண்ணாடுற்றனன். அதனால் சுவ
ர்க்கம் விளங்கவில்லை. அச்சாப மோசனம் இப்பொழுது
எவ்வாறுண்டாகும் என்று இச்செய்தியை உரைத்து வினா
வலும், வியாழபகவான், தேவர்களே! அச்சாப காரணத்
தைச் சொல்லுகின்றேன் கேளுங்கள். பூமியில் காவிரித்த
டத்திற் பிரமபுரியென்னுந் திருத்தலம் ஒன்றிருக்கின்றது.
அங்கு முன் ஒருகாலத்தில் பிரமன் பரிமேதவேள்வி செ
ய்யும்பொழுது அவர் மகிழும்படி வாலகில்லியராதி முனிவ
ர்கள் அப்பிரமபுரியினின்று, காவிரித் தென்கரையிலுள்ள
பலாசவன மடைந்து சமிதை முதலியவற்றைக் கட்டி
யொருவருக்கொருவர் சகாயமாய் அடியைப்பற்றித் தூக்
கியெடுத்துக்கொண்டு வருத்தமுற்றவர்கள்போல வந்தனர்
கள் இவ்வாறு வருமவர்களைக்கண்ணுற்று, ஐராவதமேறிய
பாகசாசனன் மதத்தால் மோகமுற்றுச்சிரித்தனன். பின்னர்
பெருவிரல் அளவினர்களான அவ்வெல்லா முனிவர்களும்,
ஓ இந்திரனே! நீ ஐசுவரியமோகத்தையடைந்து, எங்களைத்த

வத்தினர்களென்றோராது பரிகசித்தனே. அதனுலுனக்குக் குலதெய்வமறதியால் பெரிதான சாப முண்டாகுமென்று கூறினர்கள். அதனுல் உங்கள் அரசனுக்கு இப்பொழுது சாபம் வந்தது. ஆதலால் இவ்விந்திரன் அத்தலத்தையே அடைவானுயின் க்ஷேம மடைவான என்ற தேவகுருவின் வசனங்கேட்ட தேவர்கள் தங்கள் அரசனை அத்தலத்திற்கு அழைத்து வந்தனர்கள். அத்தலத் தெல்லையை மிதித்தவுடனே சுராதிபன் தெளிந்த மனத்தினனுயினன். பின்னர் தேவர்கள் வலவைரியான இந்திரனைத் திரிவேணி சங்கமத்தில் ஸ்நாநஞ்செய்வித்து, முனிவர்கள் வேதமந்திரங்களாலே செபிக்கப்பட்ட சலசோதகங்களாலுந் திருமஞ்சனம் ஆட்டுவித்தனர்கள். பின்னர் தேவராஜனுகிய வாஸவனும் சாபத்தினின்று விடுபட்டுமிகவுந் தெளிந்த மனமுள்ளவனுய்த் தவம்புரிந்து பக்தியுடன் பிரமமகாலிங்கத்தைப் பூசித்து முன்போல வத்தமமான சுவர்க்கத்தை யடைந்தனன். அத்தலத்தின் கிழக்குத்திக்கில் இந்திரனுலாக்கிய இந்திர தீர்த்தமென்னும் பெயர்பெற்ற தடத்தில் ஸ்நாநஞ் செய்பவனுக்குச் சகல பாவங்களும் விலகுமென்று கூறிய சூத முனிவரை நோக்கிப் பின்னுங் கேட்பாராயினர்.

ஒன்பதாவது அத்தியாயம் முற்றிற்று.

---

## 10-வது. சூரியன் பூசித்த அத்தியாயம்.

ஓ, சூதமுனிவரே! முன்பு சூரியன் பிரமலிங்கத்தை எந்நிமித்தம் நன்றாகப் பூஜித்தனனே. அதையும் விஸ்தாரமாய் எங்கட்கு உரையுமென்று வினவிய நைமிசமுனிவர்களைப் பார்த்துச் சூதமுனிவர் வசனிப்பாராயினர். முற்காலத்தில், சுராசுரர்களெல்லாஞ் சேர்ந்து அமரத்துவத்தைக் குறித்து அமுதத்தை உண்டாக்குவதில் இச்சையுடையவர்களாகி மந்தரப்பருவதத்தை மத்தாகவும், வாசுகிப்பணியைக்கயிருகவும் இயற்றித் திருப்பாற் கடலைக் கடைந்தனர்கள். அவ்வாசுகி மந்தரப்பொருப்போடு உறைஞ்சலால்

அதன் வாயினின்று கக்கிய ஆலாஹலவிஷம் மூவுலகத்தையுந் தகிக்க அதனால் அவர்கள் இடபத்துவஜராகிய உமாபதியைச் சரணமடையவும் யாவருக்கும் பிதாவாகிய அச்சிவ பெருமான் அதனை உண்டருளினர். பின்னர் காமதேனு, கற்பகத்தரு, சந்திரன், கௌஸ்துவமணி, அமுதத்தால் நனைந்த இலக்குமி, தன்வந்திரியாகிய இவர்களும், பின் அத்தன்வந்திரியோடு அமுதமும் அக்கடலிற் றோன்றின. அவ்வமுதத்தைக் குறித்து தேவாசுரர்களுக்கு யுத்தமுண்டாயினதால் விஷ்ணுவானவர் தனது மோகினி யுருவெடுத்துத் தேவாசுரர்களை இரண்டு பந்தியா யுட்காரவைத்து அசுரர்களை மோகப்படுத்திச் சுரர்களுக்கு அமுதத்தை அருத்திவிக்கும் பொழுது இராகுவும் அமுதத்தை விரும்பித் தேவபந்தியை யடைந்தனன். அவனைக் கண்ட சூரிய சந்திரர்கள் மோகினியுருவடைந்த திருமாலினிடத்திற் சாடையாய்த் தெரிவித்தனர்கள். அவர் இராகுவை சக்கரத்தினால் வெட்ட அவன் இருகூறுயினன். பின்னர் அவனது வேண்டுகோளால் பிரீதியுற்ற மோகினி உருவாகிய விஷ்ணு ஓ, இராகுவே! நீ பருவங்களில் இவர்களையே புஜியென்று உத்தரவு கொடுத்தனர். இவ்வாறுகூறிய அவரது வசனத்தைவினவி, சூரியன் தேவர்கட்கு உபகாரமாய் இராகுவை அமுதம் புசியாது செய்த எனக்கு அவன் என்னை உண்பதே பலனாயிற்று. ஓ, சந்திரனே! உபகாரம் செய்கிறவன் மித்திரன் அபகாரம் செய்கிறவன் சத்துரு என்னும் சாத்திரம் நம்மிருவர்கட்கும் விபரீதமாயிற் றென்று உரைத்துச் சினந்து தனது ஸகஸ்கிரகிரணங்களால் உலகங்களை மிகக் கலக்கும்படி தகித்தனன். அப்படி தகிக்கப்பட்ட எவ்வுயிர்களும் மிக நடுக்க மெய்தினர்கள். நதிகளும், குளங்களும், மரங்களும் காய்ந்தன. புல், பூடு, செடி, புதர்களெல்லாம் எரிந்தன. பிறகு பிரமவாதிகளான முனிவர்கள் உலகங்கட்குக் கருணை செய்ய விரும்பிப் பிரேமபுரித்தல மடைந்து தேவதேவேசராகிய பிரேமலிங்கத்தை ஸ்ரீமானும், சந்திரமௌலியும், ஆகாசகங்கையால் அலைக்கப்பட்ட மேகம்பொருந்திய சடை

வினை யுடையவரும், விசுவேசரும், யாவற்றையும் *புரப்பவரும், திரிபுராந்தகரும், ஈசுவரரும், சர்ப்பங்களால் அலங்கரிக்கப்பட்ட திருமேனியுடையவரும், தேவர்கட்கு முந்தினவரும், முனிவர்களால் துதிக்கப்பட்ட திருப் பதங்களையுடையவருமாகிய ஸ்ரீமத் பிரேமபுரீசரே! தேவரீர் சூரியனால் தகிக்கப்பட்ட உலகங்களைக் காத்தருளுமெனத் துதித்தனர்கள். துதித்தலும், பிரமன் முதலியவர்கள் துதிக்கும் மகிமையுடையவரும், ஷாட்குண்ணிய பரிபூரணரும், வேதாந்தங்களால் தேடப்படும் ஈசுவரரும், அந்தகாந்தகருமாகிய அப்பிரேமபுரீசர் தாமரைபோன்ற தமது சரணங்களை வணங்கும் முனிவர்களைக் கருணைக் கடைக் கண்களால் ஆனந்திப்பிக்கிறவராகத் தோன்றி, "ஓ. முனிவர்களே! இப்பொழுது நீங்கள் பயப்படாதேயுங்கள், உலகங்கட்கு உண்டாகிய இப்பயத்தை விரைவில் வேருடன் களைவோம்" என்று அதிசீதமாய் அமுதம்போன்ற தமது வசனங்களால் அவர்களைச் சந்தோஷப்படுத்தி, நெற்றிக்கண்ணைத்திறக்க அங்கு நின்றும் இருப்புலக்கை, பாசம், கூர்மையாகிய திரிசூலம், கத்தி என்னும் ஆயுதங்களைத் தாங்கிய கைகளோடும் நெற்றிப்பற்களால் பயங்கரமான முகத்தோடும் புருவநெரிப்புள்ள கண்களோடும் ஏககாலத்தில் தோன்றும் ஆயிரம் சூரியர்களுடைய சுவாலாமாலைகளோடும் மனிதர் உருவைக் கடந்து தோன்றியான் செய்யவேண்டுவதை உரைத்தருளுமென்று வினவிய வித்யுன்மாலி என்னும் அப்புருடனைப் பார்த்துக் காமாரியான தேஜிவனேசர் தமதாணை மீறித் தன் கிரணங்களால் உலகங்களைத் தகிக்கும் சூரியனை மேலெழுந்து சிக்ஷி. உபேக்ஷை செய்யாதே என்று உரைத்தருளலும் அவ்வாறே அநேக காந்தியுடையவனும் சிவபெருமானது தேஜோமயனுமாகிய அப்புருடன் விரைவில் ஆகாயத்தெழும்பி சூரியனை சமீபித்தான். உடனே பார்க்கக் கூடாதவனும், சிவதேஜோமயனுமாகிய அப்புருடனை நோக்கிப் பயந்து கலங்கி [illegible] மறைந்து மேருவின் குகையை அடை

* புரப்பவர் — காப்பவர்.

ந்து ஆங்குள்ள மேருசாவரணி முனிவரைக்கண்டு வணங்கித் தனக்குற்ற அவமானத்தைக் கூறி, மனதில் சங்கை கொண்டிருந்தனன். வித்யுன்மாலியும் தனது காந்தியினால் உலகத்தை விளக்கி, உதயாஸ்தமனங்களைச் செய்து இரவியின் தொழிலைச் சந்தோஷத்துடன் செய்தனன். பிறகு கீர்த்திமானாகிய உத்தம மேருசாவரணி முனிவர் ஒளிகுறைந்த சூரியனைக் கண்ணுற்று ஓ, மித்திரனே! வரத்தக்கது வந்தே தீரும். வரத்தகாதது ஒருக்காலும் வரவேமாட்டாது ஆதலால் சாதுக்களுக்குப் பொறுமையினால் அஞ்ஞானத்தை நீக்கப்படுகின்றது. அவ்வாறு நீர் நீக்காததினால் சத்தியமென்பது பொய்யாகப்படுகிறது. எதுபோலெனில், சூரியன் ஒருவனே ஆயினும் தரங்கத்தால் பலவாகத் தோன்றுதல்போல் ஆத்மா ஒருவனே ஆயினும் பிரகிருதி குணங்களால் பலவாகத்தோன்றுகின்றனன். ஒன்றாகிய புருடன் அப்படி அநேக ஆன்மாக்களாகக் காணப்படுகின்றதும், உக்குணமேயன்றிப் பகுதியினுடைய காரியவேறுபாட்டினால் உண்டாகியகுணங்களிற்றனக்குப் பற்றுதலில்லையே, ஏனெனிற் சலசூரியனைப்போலே அவிகாரத்தினாலும், யானென்ன தின்மையாலும், முக்குணமின்மையாலும் பிரகிருதியின் குணங்களாகிய காரியங்களொன்றும் உமக்குச்சம்பந்தமில்லை. இதனால் நீரே ஆன்ம சொரூபி. இஃதெல்லாவற்றிற்கு நீரே சாக்ஷி. நீரே மாயையைக்கடந்தவர். நீரே பிறப்பில்லாதவர். நீரே எவற்றிற்கும் மேலிடம், நீரே யிச்செகமனைத்தும், நீரே யிவ்வாறு மகிமையெய்தியிருந்தும், நீரே மூன்றுவேதவடிவினராயிருந்தும், நீரே முக்குணசகிதராயினதுபற்றி, இப்பொழுது நீர் உம்மையறியவில்லை சிவபெருமானுக்குப் புரிந்த தோஷத்தை அவரே நீக்குவார் ஆனாலவர் தம்மை யாராதிக்காமல் எவ்வாறு கருணைபுரிவார். எவரிடத்தில் எல்லாம் விளங்குகின்றனவோ, எவர் எல்லாமாக விளங்குகின்றனரோ, இந்திராதியர்களை நியமிக்குங்கருத்தாவாகி எவற்றையுமெவர் நடத்துகின்றனரோ, எவர் ஜகத்சாக்ஷியோ அப்படிப்பட்டதேவர்கட்கெல்லாம் தேவனும், ஈசானருமாகிய சிவ

பெருமானை முறையாய் ஆராதித்து நீர் செய்த சிவாபராதத்தாலுண்டாகிய தோஷத்தை நீக்கிக்கொள்வீர். காவிரித்தடத்தில் மகா கைலாயத்தை ஒத்த தக்ஷிண கைலாசமென்னும் திருத்தலம் ஒன்றிருக்கின்றது. அப்பிரமபுரித்தலத்தில் தூர்ச்சடியானவர் எப்பொழுதும் விளங்குகின்றனர். அவரது ஆணையை மீறியதால் இப்பொழுது உம் தொழில் இழந்தீர். பிநாகபாணியாகிய அவரது செயலை யார்க்கும் தள்ளத் தகாததல்லவா? அவர் சத்திய ரூபியாயும், சத்திய வாக்காயும், விராட்டுருவமாயும், நீலலோகிதமாயும், ஊர்த்துவரேதஸாயும், விரூபாக்ஷமாயும் விளங்குகின்ற பரப்பிரமமாதலின் அவராணையை எவன் கடப்பான். யாது காரணத்தால் சராசரத்துக்கு நாயகனும், எப்பரசிவமோ அதனால் பிரமபுரமென்னும் அத்தலத்தில் அபர்ணையோடும் எந்நாளும் விளங்குகின்ற அச்சிவபெருமானையே சரணடையும் உமக்கு எல்லா நன்மையும் எய்தும் என்று கூறிய மேருசாவரணிக முனிவரது அமுதமயமாகிய அவ்வசனத்தைக் கேட்டு, விகர்த்தனன் பிரமபுட்கரணித் தடமடைந்து எப்பொழுதும் ஹரியால் சேவிக்கப்பட்டவரும், யக்ஷ கந்தருவ தேவாதிகளாலும் முனிவர்களாலும் சேவிக்கப்பட்டவரும், சித்துருவினரும், ஸ்ரீமத் பிரம விமானத்தில் விளங்குபவருமாகிய சங்கரனை வணங்கிப் பலவிதத் தோத்திர வசனங்களால் துதித்துப் பூருவதிக்கில் தூய்மையாகிய இடத்திலிருந்து தற்சொரூபத்தைச் சிந்தித்துத் தவம் புரிந்தனன். இவ்வாறு சிலநாள்களில் இயற்றிய சிலாக்கியமான கையடையினால் பிரசன்னரான ஷட்குணம் நிறைந்த மகேசன் தமதுருவாகிய சூரியனைப்பார்த்துப் பல கிரணங்களையுடைய பூஷாவென்னும் ஓ, சூரியனே! நீ ஒளியினிடத்தை அடைந்து பிரமாதிகள் துதிக்க நமதாணையைப் பரிபாலித்துக் காலம் தவறாமல் முன்போலச் ஸம்க்ஞை சாயையென்னும் மனைவிகளோடும் சுகமாயிருக்கக் கடவை. ஓ, விண்மணியே! பூமியிலுள்ள இச்சூரிய புஷ்கரணித்தீர்த்தம் இவ்வுலகில் என்றும் உள்ளதாயும், தன்னில் ஆடுவோர்க்கு

கமதனுக்கிரகத்தால் எல்லாப் பாவங்களையும், பிணிகளையும் நீக்குவதாக ஆகடபோகின்றது. ஆதலின் நீயும், இதில் ஸ்நானம் செய்தமாத்திரமே பலனை அடையப் போகின்றாய் என்றுரைத்த ஸ்ரீமானாகிய தேவதேவருடைய வசனம் கேட்டு மிகு காந்தி பெற்ற சூரியன் தவத்தால் அக்கினியை வென்று எச்சோதி மண்டலங்களுக்கும் மத்தியில் இருப்பவனாகித் தனது கிரணங்களால் எவ்வுயிர்களையும் பத்து திக்குகளையும் விளக்கினன். வித்யுன்மாலியும் மகேசருடைய அனுக்கிரகத்தால் தன்பதம உற்றனன். ஆயுள் விருத்திகரமாகிய இக்கதையைத் தினமும் கேட்போன் பிணியின்மையும், தீர்க்காயுளையும் அடைந்து வெகுகாலம் சுகித்திருப்பான் என்று கூறிய சூதமுனிவரை நோக்கிப் பின்னரும் வசனிப்பாராயினர்.

பத்தாவது அத்தியாயம் முற்றிற்று.

---

## 11—வது, சூரியபுஷ்கரணி மகிமையுரைத்த அத்தியாயம்.

ஓ, சூதமுனிவரே ! சூரிய புஷ்கரணித் தீர்த்த மகிமையையும் அவருக்கு ஸமிக்ஞைதேவி மனைவியாயிருக்கச் சாயாதேவியும் எப்படிப் பத்தினி ஆயினள். அதனையும் இப்பொழுது சொல்லுமென்று வினவிய நைமிசமுனிவர்களைப் பார்த்துச் சூதமுனிவர் சொல்லுவராயினர். முற்காலத்தில் ஆயிரம் கதிரை உடைய சூரியன் துவஷ்டாவின் மகளாகிய ஸமிக்ஞா தேவியைக் கல்யாணம் செய்தனன். பிறகு அவள் தர்மராஜனென்னும் காலனைப் பெற்றனள். அவள் தினந்தோறும் சூரியன் ஆலிங்கனத்தைப் பொறுக்கமாட்டாமல் வெப்பத்தால் மிகத்தபித்துத் தனது சாயையைத் தன்னுருவாக்கித் தான் பெண்குதிரையின் உருவத்துடன் இங்கு சீக்கிரமாக வந்தேனென்று உரைத்து தந்தையின் வீட்டின்கண் வெகுகாலம் இருந்துவிட்டனள். பின்னர் சூரியனும் சாயாதேவியை ஸமிக்ஞாதேவி என்றெண்ணி அவளுடன்

பலகாலம் இரமித்துக்கொண்டு இருந்தனன். சில நாளின் பின்னர் அச்சாயையினிடத்துச் சனிபகவான் ஜனித்தனன். ஒருக்கால் தர்மராஜன் பிதாவின் மடியிலேறினர். சாயா புத்திரனாகிய சனி அத்தர்மராஜனைப் பார்த்து என் அண்ணுவே, யமனே! உனக்குத் தாயைக் காணேம். அவள் எங்கே போயினள். என் பிதாவாகிய சூரியன் மடியில் நீ எப்படி ஏறி இருக்கின்றாய் என்று உரைத்தனன். யமன் இவ்வசனம் கேட்டுக் கோபத்தால் கலங்கிச் சாவினல் சாயா புத்திரனை உதைக்கவே தனது காலில் அடிபட்டு அதனல் அவனெப்போது பங்குவாயினன். அதைக்கண்ட சூரியன் உடனே ஸமிக்ஞையைத்தனதருகில் காணுது ஞானக்கண்ணால் வேறிடத்தேகினளென்று தெரிந்து மாமனுராகிய துவஷ்டாவின் இடஞ்சென்று தம்மனைவியை யாசித்தலும் ஓ, பூஷாவே! என்மகள் உன் தேஜகாந்தியைத் தனக்குச்சகிக்கமுடியவில்லை என்றனள். ஆதலின், உன்னைச் சாணையிலேற்றி மெய்யொளி மெலியும்படிச்குக் கடைகின்றேன் என்று கூறிய மாமனுர் மொழிகேட்டு அச்சூரியனும் அவ்வாருகுக வென்று உரைத்தனன். உடனே துவஷ்டாவும் அகலியை முயற்சியுடன் சாணையிலிட்டுக் கடைந்தனன். அக்காலத்தில், சூரியனது ஒளித்துணுக்குகள் தெறித்தன. அது எந்தெந்த இடங்களில் சிதறியவோ அவ்விடங்களில் சூரியபுஷ்கரணி என்னும் தீர்த்தங்கள் உண்டாயின. அத்தலங்கள் ஜடாயு பூசித்த புள்ளிருக்கும் வேளூர், மாயூரம், திருவெண்காடு, நகார்ச்சுனம், திருநாகேச்சரம், திருவையாறு, திருவிடைமருதூர், திருக்காளத்தி, திருவருணை, கோகர்ணம், *வாட்போக்கி, †பிரமபுரி, பிரோமபுரி இப்படிப்பட்ட சில ஸ்தலங்களேயாகும். தமக்குச் சுபத்தை விரும்புவோர்கள் அத்தீர்த்தத்தில் முழுகித் தவம் புரியல் வேண்டும். சேனும் முனிவர்களே! பின்னர் துவஷ்டாவினுல் கடையப்பட்ட சூரியன் முன்னிலும் மிகுகாந்தியோடு விளங்குவதைக்கண்டு, தெய்வத் தச்சனுகிய துவஷ்டா இரமித காந்தியு

---

* வாட்போக்கி—இரத்தினகிரி. †-பிரமபுரி—சீர்காழி.

டைய இவனை என்மகள் எப்படித் தழுவுவாள் என்று கலங்கிச் சிந்திதிருக்கும்போது, அங்கு வந்த கண்ணுவமகா முனிவர் அவன் மகளாகிய ஸமிக்ஷைக்குச் சவிதாவின் ஒளியைச் சகிக்கும் வண்ணம் ஓர் உத்தம மந்திரத்தை உபதேசிக்கவும் அவள் அதைப் பெற்றுப் பெட்டைக்குதிரை உருவை நீங்கித் தனதுருவை அடைந்து சுவர்க்கத்தில் நாடோறும் சூரியனுடன் சுகித்திருந்தனள் என்று கூறிய சூதமுனிவரைப் பார்த்துப் பின்னரும் கேட்பாராயினர்.

பதினொன்றாவது அத்தியாயம் முற்றிற்று.

---

## 12-வது, சந்திரன்சாபமோசனவத்தியாயம்

ஓ, சூதமுனிவரே! முற்காலத்தில் சந்திரன் யாதுகாரணத்தால் பிரமலிங்கத்தைப் பூசித்தனனோ அதையும் விரிவாய்க்கேட்க எங்களுக்கு விருப்பமிருப்பதால் நன்றாயுரைத்தருள வேண்டுமென்று கேட்ட நைமிசமுனிவர்களைப் பார்த்துச் சூதர் சொல்லத் தொடங்கினர். பூர்வத்தில் சந்திரன் தக்கன் மகளிர்களாகிய அச்சுவினி முதலிய இருபத்தேழு நக்ஷத்திரங்களையும் மணம் புரிந்தும் அவர்களுள் உரோகணியிடத்திலேயே விருப்பமுற்று மற்றையவர்களை விரும்பாதிருந்தனன். அதனால் உரோகணியல்லாத மற்றைய யாவர்களும் கோவமுற்றுப் பிதாவாகிய தக்ஷனையடைந்து ஓ ஐய்யா! நீர் எங்களைக் கலாநிதிக்குப் பாணிக்கிரகணம் செய்துகொடுத்தீர். தகப்பன் மகளை உதககதாரையை முன்னிட்டு எவனுக்குக் கொடுக்கின்றானோ அப்புருடனுக்கே அவள் பாரியாகின்றாள். மற்றவனுக்கன்று. இது பழமையான வேதமொழி. அத்தம்பதிகட்கு இகத்தில் தருமம், அர்த்தம், காமங்கள் உண்டாகின்றன. உலகத்தில், ஜெனிக்கும்புருஷன் இருடிகடன், தேவர்கடன், பிதிரர்கடன் என்னும் முக்கடன்களையுமுடையவனாகின்றான். பின்னர் பிரமசரியத்தால் இருடிகளையும், மக்க சருமத்தால் தேவர்களையும், சந்ததியால் பிதிரர்களையும் சந்தோஷப்படுத்தி அம்

மூன்று கடன்களினின்றும் நீங்குகின்றனன். ஆதலின், விவாகமானது இகபர மிரண்டிலும் அன்பிற்குக் காரணமாகச் சொல்லப்பட்டது. பெண்கட்கு இரத்தினாதிகளாலமைந்தது ஆபரணமன்று, கணவனே ஆபரணம். அக்கணவனுக்குச் சிலாக்கியமான பாக்கியம் மனைவியேயாதலின், அவன் வெகுகாலம் சுகத்தை அடைகின்றனன். அந்தப்பத்தாவினகண் இருந்து ஆனந்த முண்டாகிறது. அவ்வானந்தத்தினால் புத்திரனுண்டாகிறான். அப்புத்திரனால் அவ்வங்கிசம் விளங்குகின்றது. அந்தவங்கிசவிருத்தியால் பிதிரர்கள் சந்தோஷிக்கின்றார்கள். அப்பிதிரர்களன்பினால் சுபகரங்களான உலகங்கள் உண்டாவதில் தடையின்று. இப்பொழுது எங்கள் கணவன் எங்களைச் சந்தோஷிப்பிக்கவில்லை. உரோகணி ஒருத்தியையே விரும்பி எங்களை ஒரு காலத்தும் பார்க்கவில்லை. எங்கள் கன்னங்களும் வெண்மையடைகின்றன. அவன் வஞ்சனையினால் நாங்கள் பிழைக்கவும் மாட்டோம். பூமியில் பெண்கட்குக் கணவன் அன்பின்மையைக் காட்டிலும் பெருந்துக்கமும் கிடையாது. அப்பெண்கட்குக் கணவன் அன்பினைக் காட்டிலும் சுவர்க்கத்திற்பெறும் பெருஞ்சுகமுமில்லை என்றுரைத்த தன் மகளிர் வசனங்கேட்டுச் சிறுவிதி மருமகனிடம்போய் முகம் கடுகடுத்து மிகுந்த கோபம்கொண்டு ஓ, இமகிரணனே! இப்பொழுது நான் சொல்லும் வசனத்தைக்கேள். எவனுடன் மனைவிகளைச் சமமாகப்பார்க்கவில்லையோ அவன் மலமூத்திராதிகளால் நிறைந்த பயங்கரமாகிய நரகத்தில் தள்ளுண்பதுமன்றி விரைவில் க்ஷயரோகியுமாகின்றான் என்பது வேதவிதியே. கணவனுக்கு மனைவியே ஆன்மாவாதலினால் ஆன்மவஞ்சனை கூடாது. கன்னியர்கள் புத்திரனைப் பெறுமாறு நாமிருவரும் சேர்ந்து படுக்கையை அடைவோம். அவ்வாறே வீரியத்தைத் தரிப்போமென்னும் பொருளுள்ள வேதமந்திரத்தைத் தனது வரர்களிடத்துமொழிந்து மாலையிடுகிறார்கள். அக்கினிசாக்ஷியாய் உன்னால் பாணிக்கிரகணம் பண்ணப்பட்ட இப்பெண்களிடத்தில் நீ வேறுபாடு

டைய புத்திரனைச் செய்கின்றாய் ஆதலின் க்ஷயரோகி யாகு வாயென்று சபித்தலும், உடனே ஓஷதீசனாகிய சந்திரன் க்ஷயரோகமுற்று நாளுக்குநாள் மெலிந்தகலையினன். அதனால் பூதலத்தில் பயிர் முதலிய ஓஷதிகளும் குறைவுற்றன. அக்குறைவினால் பிராணிகட்கு அன்னமின்மையாயின. தருக்களும், கொடிகளும், புற்களும், புதர்களுமெல்லாம் குறைவுற்றன. ஸ்வாகா, ஸ்வதா, வஷட்காரங்களு முண்டாகவில்லை. அதனால் தேவபிதிரர்கட்கு ஒருக்காலும் திருத்தியுண்டாகவில்லை. ஆனதுபற்றி இந்திராதிதேவர்கள் சந்திரனையும் கைப்பற்றி அழைத்துக்கொண்டு பிரமனைச் சரணமடைந்து ஷாட்குண்ணிய பரிபூரணரும் தேவதேவேசருமாகிய பாரதியின் பிராணவல்லபரே! முன்னர் உலகத்தைச்சிருட்டிப்பவரும், அதனைக்காப்பவரும், அதன்பின் அவைகட்கெல்லாம் புக்கிடமாவோரும் நீரே என்று துதித்து அவரை நோக்கிப் பகருகின்றனர். தக்ஷன் சாபத்தால் சந்திரன் தேய்ந்தனன். அதனால் மூவுலகும் நாசமுற்றன. *அக்கினி முதலிய நாங்கள் கிருஷ்ணபக்ஷ பிரதமைநாள் தொட்டுச் சந்திரனுடைய அமுதமயமாகிய கலைகளைப்புசித்து வருகின்றோம். சந்திரகலாவிருத்தியினாலேதானே பைங்கூழாதிகள் விருத்தியடையும், அதனாற்றானே அன்னமுண்டாகும், அதனாலல்லவா பிராணிகளும் விருத்தியடைவன. ஆதலின் இச்சாப மோசனத்தை இப்போது ஆலோசித்துச் சொல்லுமென்றுரைத்த தேவேந்திரன் வசனங்கேட்டு மகிமைதங்கிய பிதாமகர் மனக்களிப்புற்று ஆதரவுடனே உரைப்பாரா

---

* இதிஹாஸம்-ஸோமோத்பத்தி — பிரதமையில் அக்கினியும், துதியையில் சூரியனும், திருதியையில் விசுவேதேவரும், சதுர்த்தி வருணனும், பஞ்சமியில் வஷட்கார தேவதையும், ஷஷ்டியில் இந்திரனும், ஸப்தமியில் தேவரிஷிகளும், அஷ்டமியில் அஜயேகபாத்தேவதையும், நவமியில் எமனும், தசமியில் வாயுவும், ஏகாதசியில் உமையும், துவாதசியில் எல்லாப் பிதிரர்களும், திரயோதசியில குபேரனும், சதுர்த்தசியில் பசுபதியும், பஞ்சதசியில் பிரஜாபதியும்.

யினர். ஓ, மகவானே! மூவுலகத்தும் இதமான எனது மொ
ழியைக்கேள். சந்திரமௌலியாகிய சம்புவைத்தவிர வேறு
இரட்சகனை யாம் அறியவில்லை ஆதலின், உலகங்கட்குப் பி
ரபுவும், நாசமில்லாதவரும், எல்லாவித்தைகட்கும் பூதங்கட்
கும், எனக்கும் ஈச்சுவரராக விளங்குடவருமாகிய அப்பிரேம
புரீசரையே சரணமடையுங்கள். காவிரிநதி, காயத்திரி நதி
யுடனும், நமதாணையின்படி அந்தர்வாகினியாகிய சரச்சுவதி
நதியோடும் கலந்து பெருகுகின்ற அப்பிரேமபுரிஸ்தலத்தில்,
பிராணிகள் எச்சனனங்களைப்பெறினும் திரும்பத்தாயினுத
ரத்தில், வருந்தும் ஜன்மத்தைப்பெறமாட்டாது என்றுரை
த்த பிரமன் வசனத்தைக்கேட்டு உத்திரவுபெற்று இந்திராதி
தேவர்களுடன் சந்திரன் பூதலத்திற் பிரேமபுரியை அடை
ந்து திரிவேணிபுருவாய் விளங்கும் காவிரி நதியின் நன்னீரி
லும், அத்தலத்தின் பச்சிமதிக்கிலுள்ள சிலாகூல் கல்லப்பட்
ட சந்திரதீர்த்தத்திலுமாடிச் சனாதனரும், மகேசருமாகிய
பிரேமலிங்கத்தை நன்றாய்ப் பூசித்து ஆஷாடபூரணையில்,
அவ்விலிங்க மூர்த்தியின் கருணையால் சாபம் விலகி முன்
போல் கலாவிருத்தியை அடைந்துத் தனது கலையைப்பூர
ணமாகவுடைய புராதனரான பிரேமபுரீசரை வணங்கித்துதி
த்து ஆகண்டலனாதிகளால் திக்ஷியம்செய்யப்பட்ட தூய்மை
யாகிய தனது பதவியை அடைந்தனன். க்ஷயரோகியாயினும்,
குஷ்டரோகியாயினும், அபஸ்மார ரோகியாயினும் சிரத்தை
யுடன் அச்சந்திர தீர்த்தத்தில் ஸ்நானம் செய்பவன் அவைக
ளினின்றும் நீங்குவானென்பதறிதியே சந்திரன் குறைத
விர்த்த இவ்வத்தியாயத்தைக் கேட்கும் புருடன் பூமியில் வ
ங்கிசவிருத்தியையும், வியாதியின்மையையும், பாபநாசத்
தையும் அடைந்து குறைவிலாதுசுகித்திருப்பானென்று
கூறிய சூதமுனிவரைப்பார்த்து பின்னரும் கேட்பாராயி
னர்.

பனிரண்டாவது அத்தியாயம் முற்றிற்று.

## 13—வது, வாசுகி பூசித்த அத்தியாயம்.

எல்லாமுணர்ந்த சூதமுனிவரே! முற்காலத்தில் வாசுகி யாதுகாரணம்பற்றிப் பிரேமலிங்கத்தை அருச்சித்தனளென்ற அக்கதையையுமெங்கட்கு விரிவாகக்கூறுமென்று வினவிய முனிவர்களைநோக்கிச் சூதமுனிவருரைப்பாராயினர். ஓ, முனிவர்களே! பிரேமபுரியில, வசிப்போராகிய சைவதீட்சை பெற்றவரும், பஞ்சாக்ஷரத்தில் விருப்புற்றவரும், முக்காலத்தும் சிவபூஜை புரிவரும், நற்கருமங்களில் சிரத்தையுற்றவரும், இந்திரியங்களை நிக்கிரகித்தவரும், வேதாத்தியயந சீலரும், காணற்கெளிய குணமுதலாகிய பல நற்குணமுடையவரும், சாந்தபுத்தி உடையவரும், காட்சி தருகின்ற அபரசிவனைப்போன்றவருமாகி விளங்குகின்ற சிவவன்மா வென்னுமொருமறையோன் வெடியற்காலமென்று சங்கித்து நடுநிசியிலெழுந்து நீராடுவான் திரிவேணி தீரத்தடைந்து காயத்திரிநதிச் சங்கமத்திற், சிவாவென்றெடுத்துச்சரித்து ஸ்நாநஞ்செய்தனன். அதைக்கண்டு அத்தீர்த்தங்களைப்பாலிக்கும், ஒரு புருடன் அகாலத்திலாடிய அவனைப்பிடித்து விரைவில் பாதாள உலகிலடைவித்தனன். ஆங்செய்திய சிவபத்தி நிறைந்தவரும், இடைவிடாமல் பிரேமலிங்கத்தைச்சிந்திப்பவரும், மிகுந்த தேசுடையவரும், ஆகிய அவ்வேதியனை நோக்கிய நாகரிறையாகிய வாசுகி மிகவும் மனநடுங்கி விரைவிலெதிர்கொண்டு சென்றஞ்சலித்து மகிமைபொருந்திய அந்தணரேறே! உமது திருவடிக் கமலத்தாள்களால் எங்களில்விடமாகிய இந்நாகருலகம் பரிசுத்தஞ்செய்யப்பெற்றன. ஓ, வேதியரே! உமது தரிசனத்தினாலேயே நாங்கள் பிறந்த பயனை யடைந்தோம். கடலிலலையும் சட்டையை வெகுகாலஞ்சென்றதற்பின் கடற்கரை சென்றடைவதுபோலே ஒருவன் பல ஜென்மங்களிலே வருந்திச்செய்த புண்ணியங்களாலே பெரியோர்கள் வருதலைத்தனதில்லத்தில் பெறுவான். அகிகளாகிய நாங்கள் சுபாவத்தால் கட்செவிகளாயிருந்தும், எங்கள் மனம் தூய்மையின்று இப்பொழுது நின்மல மாகியது என்று துத்தியஞ்

செய்து அவருக்குப்பணிவிடை புரிந்து பின்னர் அவ்வாசுகி விலே உயர்ந்த பல இரத்திநங்களை எடுத்துக்கொண்டு உத்தம மறையவராகிய அச்சிவவற்மாவையும், அழைத்துக் கொண்டு மேலாகியதும், பிரும்மவிருடிகணங்களால் திகழ்வதுமாகிய பிரேமபுரியையடைந்து, பலவிதமான அரதனக்குவியல்களால் பிரேமலிங்கத்தை அருச்சித்து அடிக்கடி தலைகளால் வணங்கி, ஓ, தேவேசனே! என் பக்கலுற்றவன் அறிவின்மையால் உம்மவரும், தன்ம சிலரும்மாகிய இம்மறையவரை எனது உலகினில் கொணர்ந்தனன். எனதிவ்வபராதத்தைப் பொறுத்துக் கொள்ளுமென்று வடதரு நீழலமர்ந்த சங்கரனைப் பிரார்த்தித்துச் சந்தோஷிப்பித்துச் சிவவற்மாவின்கண் விடைபெற்று நாகருலகஞ் சென்றனனென்று கூறிய சூதமுனிவரை நோக்கிப் பின்னரும் வினவுகின்றனர்.

பதிமூன்றுவது அத்தியாயம் முற்றிற்று.

---

## 14-வது:வேடன் சாபம்நீங்கியவத்தியாயம்

அதி புத்தியுடையவரும் பெரும் பாக்கியமுடையவருமாகிய சூதமுனிவரே! நாங்கள் தேவரீரது முககமலத்தினின்றும் பெருகிய கதாமுதத்தை அருந்தி யருந்தித் திருத்தியடையவில்லை. ஆதலின், இப்பிரேமலிங்கத்தை அர்ச்சித்த வான்மீகியின் சரிதத்தையும் இப்பொழுது உரைத்தருளும் என்ற அம்முனிவர்களைப் பார்த்துச் சூதமுனிவர் சொல்லுவாராயினர். பிரேமபுரித்தலத்தில், நித்தியவாசஞ்செய்யும் பரத்துவாஜ மஹாமுனிவர் ஒருகாலத்தில், அத்தலத்தின்கண் எய்திய அத்திரிமுனிவர் சீடரான மதங்கமுனிவர்க்கு அத்தலத்தில், வான்மிகியினது பிறப்பையும், ஆங்கு அவர் இலிங்கத்தாபநம் செய்ததையும் உரைத்தனர். அக்கதையை உங்கட்குச் சொல்லுகின்றேன். முனிவர்களே! முற்காலத்தில வருண புத்திரனாகிய புகரன் என்னும் தேவன தென்றலாலசையும மந்தாராதித் தருக்களையுடைய நந்தன வனத்

தில், காமபாணத்தாலடிபட்ட சரீரமுடையவனாகி மனைவியுடன் விளையாடிக்கொண்டிருந்தனன். அச்சமயத்தில் மங்கை தங்கிய தூர்வாசமாமுனிவர் தற்செயலாய் ஆங்கு வருவதுகண்டுமே எழுந்து வருகவென மொழிந்து பூஜை புரியாததுமன்றி மதனனால் மதமுற்று ஆடையுமின்றி அவனேயிருந்தனன். அதனால் மிகு தேசுடைய தூர்வாசமுனிவர் கோவித்து இங்குவந்த பூசிக்கத்தகுந்த என்னை நீங்கள் யாதுகாரணத்தால் பூசிக்கவில்லையோ அதனால் இப்பொழுது உங்கட்கு வேடவுரு வெய்துக என்று புகரனை மனைவியோடும் சபித்தனர். பின்பு பேரழகுடைய சுமதி என்னும் அவன் மனைவி பயந்து படுக்கையிலிருந்து சீக்கிரமெழுந்து அவரை அடிக்கடி வணங்கி அஞ்சலித்து நின்று உலுத்தர்கள் இச்செகத்தை தனமயமாகவும், காமிகள் பெண் மயமாகவும், தீரர்களாகிய ஞானிகள் யாவற்றையும் சின்மயமாகவும் பரவசமாகி நோக்குகின்றனர். எவனுக்கு மிகுந்த சம்பத்துளதோ அவனுக்கு அறிவீனமும், மதத்தைச்செய்கின்றது. அதனால் யாதொருவிதியால் திரமும் மிகப்பசிட்டீடையுற்று இக்கிரியங்கள் மெலிந்து வலிய ஆலிங்கனம் செய்யும் அழகிய மகளிரையும் கண்ணுற்றுப் பார்க்கமாட்டானே! அவ்வறுமையே மூடனுக்கு மேலானமையாகும். இந்த என் கணவன் சம்பத்தாலும் காமத்தாலும் முதலே நிறைகின்ற உபமை அறிதி எனக்கன்னுற்றும் உமைப் பூசிக்கவில்லை. ஆயினும் இப்பொழுது தம்மால எங்கட்கு மேலான அனுக்கிரகம் செய்யப்பட்டது. ஓ, கீர்த்தியுற்ற முனிவரே! நான் இதனைமட்டும் யாசிக்கின்றேன். எங்கட்கு நல்லதேசத்தில் வேடவுருவெடுக்க அநுக்கிரகம்புரியவேண்டும். பூசுரர்களுடைய மூகத்தில், அக்கினி இருதயங்குளிர்ந்தது. க்ஷத்திரியனுடைய வாசம், சிரம், இதயம் எப்போது மக்கினிபோலிருக்குமல்லவா, மறையவர் ஏறே! உம்மைப் பணிகின்றேன். எங்கட்குச் சாபமுடிவைச் சொல்லுவீரென்று பிரார்த்திக்க அதனால் சாந்தராகிய நட்டுணர் [illegible] அவ்வுத்தமத்தாபதர் மேல்வரும் காரியத்தையும் யோசித்து சம்புத்தியில் கா

விரிநதித் தடத்தில். சிவபெருமான் நிலைபெற்று விளங்குகி
ன்ற பிரேமபுரம் என்னும் திருத்தலம் ஒன்று இருக்கின்
றது. அத்தலத்தின் ஈசானத் திக்கில் பத்துக்குரோச தூர
த்தில், பல மிருகக் கூட்டங்களால் நிறைந்த சுபமான வே
ணுவனம் இருக்கின்றது. அவ்விடத்தில் வேடவுருவெ
ய்தும் உங்கட்கு வசிக்கு மிடமுமாகும். பிரேமபுரி எல்
லைக்கடைசியாகிய ஆங்கு ஒரு பிராமணோத்தமனுக்கு மூங்
கிலரிசியை அளித்து அதனால் நீங்கள் இச்சாபத்தினின்று
நீங்குவீரென்றுரைத்து அம்முனிவர் கைலையங்கிரியைக் கு
றித்துப் போயினர். பின்னர் அவ்விருவரும் முனிவர் சாப
த்தின்வாறே வேடுருவடைந்து அறிவு மழுங்கி அத்தேயத்
தில் வந்து அழுக்கடைந்த உருவத்தையும், நிந்தையாகிய
ஆடையையு மடைந்து, வழி நடப்பவர்களைப் பொருளைத்
திருடிப்பறித்தும், பலவித மிருகங்களைச் சங்கரித்தும் ஆங்கு
க்காலங்கழித்துவருகையில் ஒருசமயத்தில், உசிர நகரத்தில்
வசிப்போனாகிய ஓர் விப்பிரன், இல்லறத்தில் விஷய சுக
ங்களில் வெறுத்த மனமுடையவனாகக் காசித்தலத்திற்கு
ப்போகவேண்டுமென்ற மிகு விருப்பமுடையவனாகிச் சிறி
து பொருளைக் கைக்கொண்டு பின்னர் பிரேமபுரி யென்
னும் தலத்தை யடைந்து ஆங்கு, திரிவேணி சங்கமஸ்நானஞ்
செய்வதில், அதிக அவாவோடும் தன்னூரைவிட்டுப் பிர
யாணியாகிப் பிரேமபுரி எல்லையை வந்தடைந்தனன். அப்
பொழுது அந்திநேரமாதலின் காற்றினாலும், மழையினா
லும், மெய் நடுக்கங்கொண்டு வழிதடுமாறிப் பசியினால்
மெலிந்து, பயத்தினா னொந்த சிந்தையனாகி, அக்கண்ணுள்
ளவேடன் குடிசிலுக்குச் சமீபமாயிருக்கின்ற ஒரு தடாகத்
தை அடைந்தனன். அதிகாலையில், தண்ணீரெடுக்கும்
ஆவலோடு தடாகத்தை வந்தடைந்த தருண வயதுடைய
அவ்வேடன் மனைவி, காற்றுமழைகளால் மெய்நடுங்கிய
வரும், பசி தாகத்தால் வருந்தினவருமாகிய அவ்வேதியனை
நோக்கி, இரக்கமுற்று, தன் குடிசிலுக்கு அழைத்துக்கொ
ண்டுபோதலும், ஆங்கு அவள் தலைவனாகிய வேடன் தன் கு

டிசிவின் புறத்துற்ற வேதியனை அடித்துக் கைப்பொருளை
யும் திருட முயன்றுள்ளதைக் கண்ணுற்ற அவ் வேடன்
மனைவி கணவனே ! மழையினுல் மெய்நடுங்கினவரும், பசி
தாகத்தினுல் வருந்தியவருமாகிய இம்மறையோனைத் துன்
பிக்காதே, துன்பிக்காதே. நீ யெவ்விதம் வருந்தியேனும்
காக்கக்கடவையென்று சொல்லி விரைவில் அவ்வேடச்சி,
மூங்கிற்குழையில் அவ்வரிசியினுடன் தேனையும் கலந்து
அக்கினியினிடலும் அது பாகமாகும் தருணம் அக்குழாய்
வெடித்துப் பாகமாகி அமுதொத்திருந்த அவ்வைணவான்
னத்தைப் பயமின்றி மறைவிடத்திருந்துண்டு, பசிதணிந்து
சற்றுக் களைத்திருந்த வேதியனை உற்றுநோக்கி ராத்திரிகால
த்தில், முன்னே தோற்றுகின்ற நாற்காலமைந்த இப்பர
ணில் சுகமாக நித்திரைசெய்யுமென்று ஆதரவோடு உரைத்
துப் பின்னர் தன் புருடனைத் துஷ்ட விலங்குகளால் இடை
யூறில்லாமல் காத்துக்கொள் என அவ்வாறே வேடன் வில்
விற்பாணத்தைத்தொடுத்து மனைவியுடன் அப்பரணுக்குச்
சமீப பூமியை அடுத்து அம்மறையவனை இராமுழுவதும்
காத்திருந்தனன். அந்தணர் சிரோமணியும் காலையில் விழி
த்தெழுந்து தன்பசியைத் தணிவித்தாதரவுசெய்த அவர்களை
அடிக்கடிக் கொண்டாடி அவர்களால் காண்பிக்கும் மார்க்
கத்தைப்பிடித்துப் பிரமபுரித் தடத்தை வந்தடைந்தனன்.
பின்னொரு காலத்தில் அவ்வேடன்மனைவி மரண மடைந்த
னள். அவள் யாதுகாரணத்தினுல் ஆபத்தையடைந்து வ
ந்தமறையோனை மூங்கி லன்னமளித்துச் சுகமளித்தனளோ
அக்காரணத்தால் சுவர்க்கத்தையடைந்து, மீண்டும் அப்பு
ண்ணியசேடத்தால் மதங்கமுனிவர் ஆச்சிரமத்தின் உள்ள
வேடர்குலத்தில, சபரி என்னும் பேருடனுதித்து மங்கை
ப்பருவம் வந்தும் விவாகமில்லாதவளாய், பம்பாநதி தீரத்
திற் சஞ்சரிப்பவளும், அங்குள்ள முனிவர் குழாங்கட்கு
நாளும் பணிவிடை செய்பவளுமாகிய அச்சிரமணி மேடுபள்
ளாகிய தனது பற்களால் நன்குய்க்கனிந்த பழங்களைக்க
டித்துநோக்கி இவை ஸ்ரீராமனுக்கே என்று, பக்தியுடனும்,

ஆதரவுடனும் சேகரித்து வைத்திருக்க, அதுகாலத்தில் இலக்குமணனோடு ஆங்கெய்திய ஸ்ரீராமனைக்கண்டு அமுதம் போற்சுவையையும், சுகந்தத்தையுமுடையனவும், வெகுகாலமாய்த் தேடி வைக்கப்பட்டனவுமாகிய வனங்களிலுள்ள கனிவகைகளால் நன்கு பூசித்து மறு ஜனனமில்லாத புண்ணியலோகத்தை அடைந்தனள். பின்னர் மனைவியையிழந்த அவ்வேடன் மிகுந்த துன்புற்றவனாகித் தன் பிள்ளைகளுடன் மிருகங்களைக்கொன்று அவ்வேணுவனத்தில் திரிந்து கொண்டிருந்தனன். ஒருசமயம் உயர்ந்தோங்கிய அவ்வனத்தில், சப்தரிஷிகளும் வரும்போது சூரியனைப்போல் காந்தியுள்ள அம்முனிவர்களைநோக்கி, நடுவழியைமறித்து அவ்வேடன் அத்திரி முனிவருடைய குடை, பாதரட்சை இதுகளைத்திருடிக்கொள்ள அவைகள் இல்லாமையால் வெயிலால் தபித்தனர். அதுகண்ட வேடன் பாதுகைகுடைகளைக் கொடுத்து விட்டனன். அதைப் பெற்ற அத்திரிமுனிவர் மனமகிழ்ந்து, வேட்டையாடுவோனாகிய அவ்வேடனுடைய பூருவ காரியத்தையும், மேல் வரப்போகின்ற காரியங்களையும், ஞானக்கண்ணாற்கண்டு தயவினால் நோக்கினார். நோக்கலும், அவ்வேடன் அதி விரைவில், தனது பாவமுற்றும் நீங்கித் தூய்மையடைந்த அந்தக்கரணவானானதலும் அவன் கண்ணிரங்கி கடைக்கணித்துக் கூறத்தொடங்கினார். ஓ, வேடனே, நீங்கள் எதனாற் சீவிக்கின்றீர்கள், நீங்கள் எவ்விடத்தில் சஞ்சரிக்கிறீர்கள், நீங்கள் எச்சாதனங்களினால் நதிகளைத் தாண்டுகிறீர்கள், நீங்கள் தினமும் எந்தத் தனத்தைச் சம்பாதிக்கின்றீர்கள் என்று வினவிய முனிவரை நோக்கி, அவ்வேடன் தன திருகைகளையும் தலையிற்குவித்து வணங்கிச் சொல்லத்தொடங்கினன். ஓ, முனிவரே! காட்டிலுள்ள கந்தமூலங்களால் சீவிக்கின்றோம். மூங்கிற் காட்டில் சஞ்சரிக்கின்றோம். நதிகளை தவளைக்கட்டையினால் தாண்டுகின்றோம். கிலாக்கியமான பொருளைத் திருடுகின்றோம் என்று சொல்லிய அவ்வேடன் வசனத்தைக் கேட்டு, உலகத்தைக்காத்தலில், விருப்பமுள்ளவராகிய அத்

திரிமுனிவர் இந்நான்கு பயனிலையினையுடைய வாக்கியங்களையும், இடைவிடாது அப்பியாசம்புரிவாய். இதுவே மகா மந்திரம். இதுவே உனக்கு எப்போதும் மங்களத்தைச் செய்யப்போகின்றதென்று அவ்வேடனுக்குபதேசித்து, உடன் வந்த முனிவர்களுடன் தமது ஆச்சிரமத்திச்குப் போயினர். இப்பால் அவ்வேடனும் அவ்வனத்திலிருந்து உறுதியாகிய பத்தியுடனே ஐந்து பொறிகளையும் அடக்கினவனாகவிருந்து அம்மந்திரத்தை எப்போதும் செபித்துக்கொண்டிருந்தனன். இவ்வாறு பராமா, சராமா, தராமா, ஹராமா என்ற அந்நான்கு மந்திரங்களையும் பத்தியுடனே எப்பொழுதும் மனதிற் செபித்துக்கொண்டிருந்த அவ்வேடனும் ரிஷபவாகனராகிய சிவபெருமான் சாபத்தினின்றும் நீங்கித் தேவேந்திரன் முதலிய தேவர்களால் வணங்கத்தக்கவனாக வினாவின் ஆயினன், என்று கூறிய சூதமுனிவரைப் பின்னரும் வினவுகின்றனர்.

பதினான்காவது அத்தியாயம் முற்றிற்று.

---

## 15—வது, வான்மீகிமுனிவர் பூசித்த அத்தியாயம்.

இவ்வாறுகூறிய சூதமுனிவரை நோக்கி நைமிச முனிவர்கள் ஓ, சூதமுனிவரே! பகுதி விகுதிகளால்முடிந்த அப்பதங்கள் பதப்பொருளடைந்த பயனிலையைச் செய்யும் புருடனைக் காட்டுமேயன்றி அகண்டமாயும், சச்சிதானந்தமாயுமுள்ள இராமனை எவ்வாறு குறிக்கும். அவ்விராமனைக்குறிக்கும் ராம, என்ற அவ்விரண்டெழுத்தை மாத்திரம் அம்முனிவர் இவ்வேடனுக்கு என் உபதேசிக்கவில்லை என்கிற சந்தேகம் தீர, எல்லாம் தெரிந்தவரோ வித்தாரமாக எங்கட்குரைத் தருளவேண்டுமென்ற நைமிசமுனிவரை நோக்கிச் சூதமுனிவர் கூறத்தொடங்கினர். நைமிச முனிவர்களே! இராமன் சோதிமயவடிவாக விளங்குகின்றனர் என்ற சுருதிமொழியால் பராம, சராம, தராம, ஹராம என்ற இந்

நான்கு வாக்கியங்களுக்கும் அத்துவித பிரம உருவான இராமனிடத்திலே பொருட்படுமாதலால் இதுவே தாரக மந்திரம்: இஃதை முக்கியாதிகாரிகளாகிய அந்தணர்க்கே உபதேசிக்கத் தகுதியாதலான் இவ்வாறு மாறுபாடாக உபதேசித்தருளினர் என்று கூறலும் முனிவர்கள் இதன்மேலவ்வேடன் வான்மீகி ஆயினதையும் கூறுகவெனப் பின்னரும் கூறுவாராயினர். அவ்வேடன் ஓரிடமெய்தி எப்பொழுதும் இராமனிடத்தே மனம் வைத்தவனாகி அம்மந்திரத்தை இடைவிடாது கட்டையைப்போற் சலிக்காது செபித்துக்கொண்டு வேறொன்றையும் அறியாமலும் காற்றெறியினால் உண்டாகிய தூளிகளால் நன்றாய் மேனிமுழுதும் மறைந்து புற்றைப்போலாகிய அவ்வேடனிடத்தில், பறவைகளெல்லாம் பயமின்றிக் குடிகொண்டிருந்தன. சட்டைபோன்று நெடுநாள் அசையாதிருந்த அவ்வேடன்மீதில் முளைத்த சிறிய மூங்கில் நாளடைவில் ஆகாயத்தை அளாவும்படிப் பெரிய மூங்கிலாகிச் சாமவேதம்போல் பருவங்களையுடையதும், துவிஜச்சிரேஷ்டங்களால் சேவிக்கப்படுவதும் பிரகதா, பவமானத்தினால் தீர்க்க சுரங்களோடு கூடியதும், ஆயிரம் சாகைகளைப் பொருந்தியதுமாகி விளங்கிற்று. அதன் பின்னர் அம்மூங்கிலைப்போல அவனது தவமும் உலக மெங்கணும் பரவுதலால் தூர்ச்சடியாகிய சிவபெருமான் அவ்வேடனையனுகித்தவம்புரிதலைநோக்கி, மனதிலாச்சரியமுற்று மகிழ்ந்து வருணனுடைய ஜலதாரைகளால் நனைக்கப்பட்ட அவ்வேடனை எழுப்பி அன்புடனே கூறுகின்றனர். ஓ, வான்மீகியே! இத்தவத்தினாலும், மஹாமந்திர ஜபத்தினாலும் உன்கண் மிகவு மன்புடையவனாயினன். இப்பொழுது வேண்டிய வரத்தைக் கேட்டுக்கொள். அஷ்டாக்ஷரத்திலுள்ள ஐந்தாமெழுத்தினாலும் பஞ்சாக்ஷரத்திலுள்ள இரண்டாமெழுத்தினாலும் சேர்க்கப்பட்ட இராம என்கிற பதத்தால் அத்துவிதியத்துவம் சொல்லப்படுகின்றது. என்னைக்காட்டிலும் இரண்டாவதுபொருள் இல்லையில்லை. இவ்வுலகம் என் வடிவமே, எப்புருடன் இவ்வுலகில் வஸ்

தவை நானாவிதமென்றறிகிறானோ. அப்புருடன் எமனிடத்
தினின்றும் மரணம்முதலிய துன்பத்தை அடைகின்றனன்.
ஒன்றேபொருளென்று நிச்சயிப்போனுக்கு சோகமோகங்
கள் உண்டாகாது. புருடனானவன் ஆன்மாவை நானேதா
னென்று அறிவானேயாகில், எதனையிச்சித்து எதின்னிமித்
தம் எவ்விச்சையின் பொருட்டுஞ்சரீரத்தைத் தபிக்கும்படி
செய்விப்பானா, எவன் ஆன்மாவுக்கும், வேறுபொருட்கும்
பேதத்தைச்செய்கின்றனனோ வேற்று நோக்கமுள்ள அப்
புருடனுக்கெந்நாளும் மிகுபயத்தைப் புரிகின்றேன். இப்
பொழுது என்னை எவ்வுருவாகப் பார்க்கின்றாயோ இது
எனது நிஜமாகிய வடிவமில்லை. நீ என்னைச் சச்சிதானந்த
வடிவாகவும், பிரகிருதியைக் காட்டிலும் வேற்றுமையாக
வுந்தெரிவாய். இவ்வாறு தேவதேவனாற்சொல்லப்பட்ட அத்
தவசியானவன் தவத்தினின்று நீங்கிச் சந்திரகிரணத்தாலல
ங்கரிக்கப்பட்ட சிரங்களை யுடையவரும், யோகிகளுடைய
இதயகமலத்தில் வசிக்கின்றவரும், மேலானவர்கட்குண்
மேலானவரும், சிறியவற்றிற்குள் சிறியவரும், பெரியவற்
றிற்குள் பெரியவருமாகிய உம்மை அடிக்கடி நமஸ்கரிக்கி
றேனென்று நமஸ்கரித்துக் கருணாமுதத்தினால் நிறைந்த
கண்களை யுடையவராயும், தனது அந்தக்கரணத்தில் வசிப்
பவராயும் உள்ள தேவேசனைத் தலையிற் கைகளைக்கூப்பித்
தன் மனதிலுள்ளவைகளை இரந்தனன். ஓ! ஷட்குணநிறை
ந்த தேவேசரே! தவத்திற்குப்பயனும் என்னிடத்து அன்
பும் இருக்குமேயாயின், இவ்வரத்தை அருளல் வேண்டுமெ
ன்றனன். முன்னொருக்கால் துர்வாசமுனிவரால் கொடு
க்கப்பட்ட எனது சாபவுருவாகிய பாபத்தினின்றும் விடுப
ட்டு மிகு நிறைவாகிய பிர்மஸ்ரீயை அடையவேண்டுமெ
ன்று கூறிய அவனுடைய சொல்லைக்கேட்டு மிகுந்த அன்ப
டைந்த முக்கண் மூர்த்தியானவர் உலகங்கட்கு அநுக்கிர
கம்புரியும் விருப்பத்தால் அவ்வாறேயாகுகவென்று அம்
முனிவனை நோக்கிக்கூறி, பின்னரும் அன்புள்ளவரும் தயா
நிதியுமாகிய தேவதேவேசர் எக்காரணத்தினால் மட்குவிய

லாகிய வன்மீகத்தினின்றும், பிரசேதசினால் நினைக்கப்பட்டு
த்தோன்றினையோ, அதனால உன்னை வான்மீகியென்றும்
பிராசேதசனென்றும், ஜனங்கள் என்னருளாற் சொல்லு
வார்கள். மற்றும் எனது ஆன்ம உருவாகியவனும், பூமி
யில் அவதரிக்கப்போகின்றவனுமாகிய இராமனுடைய எ
ல்லாச்சரிதங்களையும் நிரந்தரமாகிய இராமாயணமாகச் செ
ய்யப்போகின்றனை என்று அநுக்கிரகித்தருளிச் சிவபெரு
மான் ஆகாயத்தில் விடையுடனெழுந்து மறைந்தனர். வா
ன்மீகியும் தூர்ச்சடினிடத்தினின்றும் பிர்ம்மரிஷித்துவத்
தையடைந்து புண்ணியத்தையளிக்கின்ற பிரேமபுரித்தலத்
தையடைந்து வடமூல லிங்கத்தை நமஸ்கரித்து அதன்வட
துபாகத்தில் உத்தமமாகிய ஓர் லிங்கத்தைத் தன் பெயரா
ல் பிரதிஷ்டை செய்து மனதுக்கினிய மேலாகிய வில்வபத்
திரங்களால் பூசை புரிந்தனர். எப்புருடன் அவ்வான்மிக
லிங்கத்தை நமஸ்கரித்து வில்வங்களால் பூசிக்கின்றானோ
அப்புருடன் எல்லாப் பாவங்களினின்றும் விலகி சிவனுல
கத்தில் பூசிக்கப்படுகின்றான். எந்தப்புருடன் சகலதோஷ
ங்களை நீக்குகின்ற வான்மீகி முனிவர் ஜென்ம விருத்தாந்த
த்தை நன்மனமுடையவனாயிருந்து நாடோறும் படிக்கின
றானோ அப்புருடனும் எல்லாப் பாவங்களினின்றும் நீங்கி
இவ்வுலகில் எல்லாப் பொருள்களையுமடைந்து முடிவில்
சிவஸாயுஜ்யத்தை அடைகின்றனன் என்று கூறிய சூதமு
னிவரை நோக்கிப் பின்னரும் வினவுகின்றனர்.

பதினைந்தாவது அத்தியாயம் முற்றிற்று.

---

## 16-வது, வசிஷ்டர் பூசித்த வத்தியாயம்.

ஓ. சூதமுனிவரே! பிரேமலிங்கமானது முன் காலத்
தில் வசிஷ்ட மகா முனிவரால் எக்காரணத்தாற் பூசை புரி
யப்பட்டதோ, அக்காரணத்தையும் விஸ்தாரமாக எங்கட்
குச் சொல்லவேண்டுமென்று, கேட்ட நைமிச முனிவரை
ப்பார்த்துச் சூதமுனிவர் கூறத்தொடங்கினர். ஓ, நைமிச

முனிவர்களே! முற்காலத்தில், வசிஷ்ட முனிவருக்குச் சத்தியென்றொரு புத்திரருண்டானார். எச்சத்தியின கண்ணின்றும் வேதவியாசருக்குப் பிதாவாகிய பராசருண்டானரோ, அச்சத்தியானவர் ஒரு காலத்தில் பெரிய வனத்தில் சமித்துக்களைக் கொண்டுவரும் நிமித்தம் சகாயமின்றித்தனியே சென்றார். அவ்வனத்தில் நெடுங்காலமாயிருந்த ஒரு பூதத்தினால் அச்சத்தியானவர் கொல்லப்பட்டவராயினர். வசிஷ்டமாமுனிவரும் மிகுந்த புத்திர சோகத்தினல் தபிக்கப்பட்டவராய் பருவதத்தின் மேலேறிக் கொடுமுடியினின்றும் கீழேவிழுந்தும் பலவிதத்துன்பங்களையடைந்தும் மனது சேட்காமல் அதனால் மிகுந்த விசனமடைந்த பின்னர் மிகுதியாகிய மனவருத்தத்துடன் வனங்களெல்லாம் சஞ்சரித்து விசனமாறாது கஜாரண்ணியத்தையடைந்து மேலான தவவலிமையுடைய வசிஷ்டமாமுனிவர் எல்லாப் பூதங்களையும் நாசம் செய்யும் நிமித்தம் அதிககோபத்தினல் மற்றுமுள்ள முனிவர்களுடனே ஆபிசாரவேள்வியைச் சாத்திர விதிப்படிக்கு அத்திருவானைக்காவின்கட்செய்யத் தொடங்கினர். அதற்கு வேண்டிய இரும்பினாலும். மரத்தினாலும் ஆக்குவித்த ஜாகு, உபபிருதி முதலிய எல்லாப் பாத்திரங்களையும் பாசிக்கொத்துகளாகிய சமித்துகளையும் அமைத்துக் கொண்டு கருப்பு முண்டாசுகட்டிய ருத்துவிக்குக்களால் காலந்தவறாமல் விதிப்படிக் கரும்பாம்பினுடையவும், கரிய அஜத்தினுடையவும் வபையினல் ஹோமம் பண்ணிப், பூரணாகுதிகாலத்தில், கூவப்பட்டவைகளான எல்லாப்பூதங்களும் பத்துத்திக்குகளினின்றும் அலறிக்கொண்டு, அப்பூரணாகுதி நெய்த்தாரையால் ஜொலிக்கும் மகத்தான அக்கினியில் ஒவ்வொன்றாய் எல்லாப் பூதங்களும் வந்து விழும் சமயத்தில், நிருருதிக்கு வாகனமாகிய, பூதமும் பங்குவாகிய நிருருதியையும் இழுத்துக்கொண்டு, அவ்வக்கினியில் விழுதலும் மகாமந்திரத்தால் அக்கினி தாபத்தைச் சகித்துக்கொண்டு ஓ, சுவாமியே! ஜம்புபதியே! இப்பொழுது என்னை இரட்சியு மிரட்சியுமெ

ன்று அலறிக் கூட்பிடுகின்ற, யாதுதானபதியாகிய நிருருதி யை நோக்கி, தயாநிதியாகிய சிவபெருமான் அஞ்சேலென் றுரைத்துவிட்டு அம்முனிவரை நோக்கிச் சொல்லத் தொடங்கினர். ஓ, வசிஷ்டரே! பூதங்களையெல்லாம் நாசம் செய்கின்றதாகிய இந்த யாகம் போதும். இந்த நிருருதி யானவன் பங்கு. இவன் வாகனமாகிய இப்பூசம் நாசமடை யுமேயாயின் நடத்தலின்மையின் இவனும் நாசமடைந்த வன் போலேயாகுவன் என்று சிவபெருமான் கூற வசிஷ்ட முனிவரும் அச்சிவபெருமான வாக்கியத்தாற் பூதங்க ளினது வேள்வியை நிறுத்திப் பூரணம் செய்தனர். பின் னர் நிருருதியும் களிப்புடனே ஜம்புநாதனை நமஸ்கரித்து தோத்திரம் செய்து தனது வாகனமாகிய பூசத்திலேறிக் கொண்டு, தனது பதிக்குச் சென்றனன். திரும்பவும் உத் தமராகிய வசிஷ்ட முனிவர் பூசத்தினல் நாசம் செய்யப்பட் ட புத்திரனை எண்ணி எண்ணி மிகுந்த துன்பத்தினல் சிறி தேனுமனதிற் சுகமற்றவராகிப் பரத்துவாச மகாமுனியின் வாக்கியத்தால் கஜாரண்ணியத்தினின்று ஸ்ரீ வடாரண்ணிய த்தையடைந்து பிரேமபூமிப் பிரதேசத்தில் புண்ணியத்தை க் கொடுப்பதும் திரிவேணி தீர்த்தத்தால் குளிர்ச்சியடைந்த தும் மலர்ந்த தாமரை, செங்கழுநீர் மலர்களால் நிறைந்த நவதீர்த்தங்களால் சேவிக்கப்பட்டதும், அநேக இருடிக்கூட்டங்களால் அடையப்பட்டதும், சாக்ஷாத் கைலாயம் போலவேவிளங்குவதுமாகிய பிரேமபுரியைக் கண்ணுற்று மன க்களிப்புடன் சுபத்தை அளிக்கும் திரிவேணி தீர்த்தத்தில் நீராடி, புண்ணியாங்குர விமானத்தையடைந்து, வடமூலே சரையும் பணிந்து, சூரியபுட்கரணித் தடத்தில் தம்முடைய பெயரால் இலிங்கப் பிரதிஷ்டைபுரிந்து,ஞான வாபியிலும் ஸ்நானஞ் செய்து சோகம் நீங்கிச் சந்தோஷத்துடனே அந் தஞான வாபியின் பச்சிமத்தடத்திலுற்ற வில்வத்தருமூலத் தின் நாடோறும் ஆயிரத்தெட்டுரு பஞ்சாக்ஷர மந்திரத்தை ச்செபித்து மிகு சந்தோஷத்தை அடைந்தனர். அந்த ஞா னவாபிக்குச் சமமாகிய தீர்த்தம் எவ்வுலகத்துமில்லை. அத்

தீர்த்தத்தினால் பாகம்செய்த அன்னம், சாகம், முதலியவை களைச் சிரத்தையுடன் சோத்திரியர்களாகிய அந்தணர்சட்க ளித்தால் கோடி மடங்காகும். அத்தீர்த்தக் கரையிலுற்ற வில்வ மரத்தினடியிலிருந்து எப்புருடன் உருத்திராக்ஷ மாலைகளால் அலங்காரம் செய்துகொண்டு தாமரை மணி மாலைகளினாலாவது, உருத்திராக்ஷமாலையினாலாவது, முத் துமாலையினாலாவது, பவழமாலையினாலாவது, விசேஷமா கிய ஸ்படிகமணி மாலையினாலாவது, பஞ்சாக்ஷர ஜெபத்தை ஆயிரத்தெட்டுத் தடவையேனும், நூற்றெட்டுத்தடவையே னும், இருபத்தெட்டுத் தடவையேனும் ஜபம் செய்கின் றானோ அப்புருஷன் பிரமஹத்திசெய்தவனாயினும், சுராபா னம் செய்தவனாயினும், குருத்துரோகம் செய்தவனாயினும், சுவர்ணபஹரம் செய்தவனாயினும், இந்நான்கு பாவங்களை யும் புரிந்த பேருடன் ஐந்தாவனாசச்சேர்ந்த பாவியாயினும், எல்லாப்பாவங்களினின்றும் நீங்குகின்றனன் என்றுவிடை கொடுத்த சூதமுனிவரைப்பார்த்து நைமிசமுனிவர் கேட் பாராயினர். சூதமுனிவரே! ருத்திராக்ஷங்களில் எத்தனை விதம், எவ்வளவு ருத்திராக்ஷங்களை எவ்வாறு தரித்தல்வே ண்டும். இவைகளை எங்கட்கு நன்று வகுத்தருள்வீரென்று வினவிய நைமிசமுனிவர்களை நோக்கிச் சூதர் கூறுகின்ற னர். ஓ, நைமிசமுனிவர்களே! மத்தியபானம் செய்யினும், மாம்ஸபோஜனம் செய்தபோதிலும் உருத்திராக்ஷ மாலி கையைத் தரித்தானேயாயின், உடனே பரிசுத்தவான்மா வாக ஆகின்றனன். எவன் ஆயிரம் உருத்திராக்ஷகம் தரிக் கின்றானோ, அவன் சாட்சாத் சந்திரசேகரனே ஆகுவான். ஆயிரம் உருத்திராக்ஷமும் கிடைக்காதபக்ஷத்தில் ஒவ் வொரு முழங்கையினும் பதினாறு பதினாறும், சிகையில ஒன்றும், மணிக்கட்டுகள் ஒவ்வொன்றில் பனிரெண்டு பனிரெண்டும், கண்டத்தில் முப்பத்திரண்டும், தலையில் நாற்பதும், ஒவ்வொரு செவியில் அவ்வாறும், மார்பில் நூற்றெட்டும் தரிக்கவேண்டும். நூறுமணிகளை மத்தகத் தில் அணிந்து எத்தீர்த்தத்தில் ஸ்நானம் செய்தபோதிலும்

கங்காநதியிலாடிய பலனை அடைவானென்பதில் சந்தேகமில்லை. சில ஏகமுகங்களும், சில ஐந்து முகங்களும், சில பதினொரு முகங்களும், சில பதின்மூன்று முகங்களுமாகிய ருத்திராக்ஷங்கள் உலக பூசிதங்கள். இவ்வுருத்திராக்ஷங்களைத் தரித்தப் புருடன பாவங்களைச் செய்தபொழிலும் அப்பாவங்களில் சம்பந்திக்கமாட்டான். உருத்திராக்ஷமாலைதரித்தப் புருடனைக்கண்டு எமதூதர்களும் பயமடைகின்றனர்கள். எவன் தினந்தோறும் சங்கரா, பார்வதிசா, ஸ்ரீகண்டா, ரிஷபத்துவஜா, கங்காதரா, சந்திரமௌளியே சம்புவே, பிநாகியே என்று சங்கீர்த்தனம் செய்கின்றானோ அவனும் பாவங்களினின்று விடுபடுகிறான். பிரதோஷகாலத்திலும், சிவபூஜையிலும், சிரௌத ஸ்மார்த்த கருமங்களிலும், உருத்திராக்ஷங்களினால் அலங்கரித்துக்கொண்டு செய்வானேயாகில் அதுகள் கோடிமடங்கு பலனைக்கொடுக்கும். விபூதியினால் உத்தூளனம் செய்த சர்வாங்கத்தை உடையவனும் எல்லாப் பாவங்களினின்றும் நீங்குகிறான். விதிவத்தாகிய விபூதி, பாபிரமம் இவ்விரண்டும் சம்ஸாரத்தை நிவிர்த்திக்கும். சம்ஸாரத்தில் பயப்படுகிறவர்களுக்கு இவ்விரண்டுகளில் ஒன்றாவது சேவிக்கத் தகுந்தது. இவ்வாறு அவ்வசிஷ்ட முனிவரும் பத்தினியுடன் புராதனமான வடாரண்ணியத்திலுற்ற பிரேமலிங்கத்தைப் பூஜித்து சோகம் நீங்கியவராகி மனக்களிப்படைந்து வெகுகாலம் இருந்து ஆத்மானந்தத்தை அடைந்தனர் என்று சூதமுனிவர் கூறினார்.

பதினாறாவது அத்தியாயம் முற்றிற்று.

---

## 17—வது, காசிபர் பூசித்த அத்தியாயம்.

இவ்வாறு விரித்துரைத்த சூதமுனிவரை நோக்கிப் பின்னரும் கேட்பாராயினர். ஓ, சூதமுனிவரே! இப்பிரேமலிங்கமானது யாதொரு காசியபரால் பூசிக்கப்பட்டதுவோ, அவரெங்குண்டாயினரோ, அவர் எவ்வித ஆசாரமுடைய

வரோ, எவ்வாறு முத்தி யடைந்தனரோ, அதையும் ஓதி மெனலும் சொல்லுவாராயினர். ஓ, நைமிசமுனிவர்களே! பிரேமபுரியில் சுசர்மாவென்ற ஓர் வேதியருண்டாயினர் அவ்வந்தணர் சுருதி, ஸ்மிருதி, புராணங்களை அறிந்தவராயும், சர்வ சாஸ்திரங்களிலும் வல்லவராயும் எல்லாபாஷைகளும் உணர்ந்தவராயும், சபைகளில் வித்வான்களைச் செயிக்கின்ற வராயும், பொருளைத்தேடுவதில் ஆசையுள்ளவராயும், பிறர்க்குத் தருமத்தை போதிப்பதில் வல்லவராயும், அதனைத் தான் செய்யாதவராயும், தானே சென்று திதிகளிலுண்பவராயும் இருந்து கிரகஸ்தர்களை வஞ்சித்துத் திரவியங்களைச் சம்பாதித்தாரேயொழியத் தன்பொருளை பிறர்க்குக்கொஞ்சமேனும் கொடுக்கவில்லை. இவ்வாறு நிகழ்கையில் ஒருகாலத்தில் அப்பிரேமபுரித்தலத்தில், மேற்றிக்கிலிருந்து, ஹேமனென்று பெயர்கொண்ட ஓர் சண்டாளன் பொதிமாடுகளின் மீதில் அநேக திரவியங்களை எடுத்துக்கொண்டு, காயத்திரிசங்கமத்தில் ஸ்நானம் செய்யவேண்டுமென்று பிரேமபுரியை அடைந்து, அக்காயத்திரி சங்கமத்தில் நீராடி, தானங்கொடுக்கத் தான கொண்டுவந்த, தனங்களை எல்லாம் குவித்துக்கொண்டு, பிராமணர்களை அழைத்தான். அக்காலத்தில் வேதியரில் ஒருவரேனும் புலையனிடத்திலிருந்து தனத்தை வாங்குவதற்கு இச்சிக்கவில்லை. பின்னர் அது கேட்டுச் சுசர்மாவானவர் பஸ்ம ருத்திராக்ஷ தாரியாகி, அச்சண்டாளனை அடைந்து, எல்லாத் தனங்களையும், தானே கிரகிக்கவேண்டுமென்ற எண்ணத்துடன் சாதுரியமாகசொல்லத்தொடங்கினர். ஓ, ஹேமனே! இப்பிரேமபுரியில் பிராமணர்கட்குள் எனக்குச்சமானமான வித்வான் ஒருவருமில்லை. ஆகையினால் உன்னாற் கொடுக்கப்பட்ட தனத்தை எல்லோரும் வாங்கப்பயப்படுகின்றார். வித்துவானும் சற்குலத்திற் பிறந்தவனும் எப்பொழுதும் தானபாத்திரனும் நானே ஆதலின் உன்னாற் கொண்டுவந்திருக்கின்ற தனமுழுவதும், பிறருக்குக் கொஞ்சமேனும் கொடுக்காமல் எனக்கே கொடுப்பாயேயானால் கிரகிப்பேன். இல்லாவிடில் வாங்கேன் என்று கூறிய அம்மறையவர் மொழியை

கேட்டு, ஹேமன் என்னும் சண்டாளனும் மனக்களிப்புட
ன் ஆச்சரியங்கொண்டு ஓ, பூசுரேந்திரரே! நீர் கேட்டபடி
உமக்கே எல்லாப்பொருள்களையும் தருகிறேனென்று சொ
ல்லி, உடனே உதகதாரையைமுன்னிட்டு எல்லாத்தனத்தை
யும் அப்பிராமணருக்கே தானம் கொடுத்தான். பிறகு, இவ்
வந்தணனும் மிகுந்த அவ்வெல்லாத்தனத்தையும் எடுத்துக்
கொண்டு, இதர யாசகர்கட்குக் கொஞ்சமேனும் கொடா
மலும், பட்டணத்திலுள்ள யாவர்களும் தன்னைப்பார்த்துப்
பரிகாசஞ்செய்யவும், இலச்சையடையாமலும் தன் கிரகத்
தை வந்தடைந்தனர். பிறகு பந்துமித்திரர்கள் இவன் பிர
ம்மவம்சத்தில் பிறந்தும் சண்டாளனிடத்திலிருந்த தனத்தை
கிரகித்தானே, இவன் ஜன்மத்தைச் சுடவேண்டும். இவனி
டத்திலுள்ள எல்லாவித்தையும் அவமே அறிவின்மையால்
தனத்தில் பேராசையுள்ள இவனுக்கு எவ்வாறு புண்யலோ
கங்கிட்டும். சருவசாஸ்திரங்களையும் அறிந்தபோதிலும் காரி
யா காரியத்தை அறியவில்லை. இவன் இக்காரியம் செய்த
போதே இருக்காலும், நம்மாலும் பேசத்தகுந்தவனல்லன்.
இவனைப் பந்தியில் வைத்து அன்னமளித்தலும் கூடாது.
ஆகா, ஆச்சரியம்! இவ்விரு பிறப்பாளனுக்குத் தனத்திலு
ற்ற பேராசையைப் பாருங்கள். இவனுக்கு புராண படன
காலத்திலும், புண்ய காலங்களிலும் எவ்வளவோ தானங்
களை நம்மால் இங்கு கொடுக்கப்பட்டிருந்தும் அத்தனத்தி
னாலும் திருப்தி உண்டாகவில்லையே என்று இவ்வாறு பட்
டணத்துள்ள எல்லாச்சனங்களும் கூடிச் சுசர்மாவை நிந்தி
த்தார்கள். அது கேட்ட பதிவிரதையாகிய சுசர்மாவினு
டைய மனைவிக்கு மனம்பொறுமல் ஓ, பிராணநாதரே!
சண்டாளனிடத்தினின்றும் நிந்தையான தனத்தை ஏன்
கிரகித்தீர். நமக்கு இப்பொழுது என்ன குறைவு வெகு
சம்பத்துக்களும், நிலங்களும், கோக்களும், புத்திராதிகளும்
தானியங்களும், நமது கிரகத்தில், நிறைந்திருக்கின்றன
என்று மனைவியால் சொல்லப்பட்டிருந்தாலும், சுசர்மாவா
னவன் அவ்வார்த்தையைக் கொஞ்சமேனும் கவனிக்காமல்

எல்லாப் பணங்களையும் தனித் தனியாய்க் குப்பல் குப்ப
லாய் எண்ணி எண்ணிக்கொட்டி வாயோலையுமெழுதிப்
போட்டுக்கட்டிப் பெட்டியிலும் வைத்துப் பூட்டித் தனது
கிரகத்திலேயே காத்திருந்தானொழிய வீதிக்கும் வரவில்லை.
இவ்வாறு நகரத்துள்ள ஜனங்களும் உறவினரும் இடைவி
டாது நிந்திக்கச் சிலகாலம் அங்கு வசித்துவந்த சுசர்மா,
நாம் இங்கு இனி இருக்கக்கூடாது. இங்கிருந்து எங்கா
யினும் போகவேண்டுமென்று மனதில் நிச்சயித்துத் தனது
இல்லாளுடன் தனம் முழுவதும் ஒட்டகையின்மீது எடுத்
துக்கொண்டு உலகப்பழிப்பினிற்கஞ்சி வீட்டினின்றும்
விரைவில் வெளிப்புறப்பட்டு வராகமலை அருகில் ஒருகாட்
டில் வருகையில் பயங்கர உருவினரும், பல்விதப் படையி
னருமாகிய அநேகம் திருடர்கள் எதிர்ந்து, ஒட்டகங்கள்
சுமந்துவரும் பொருள் யாவும் கவர்ந்து ஆவியையுங் கவர்
ந்து கொள்வான். நெருங்கி வருத்துகையில் அவர்களைப்
பார்த்து மனைவியுடன் பயந்து நடுங்கி வடதருநிழலின்கண்
விளங்கும் திருக்கோயிலுள் எழுந்தருளிய ஸ்ரீமத் பிரேம
புரீசுவரரைக் குறித்து ஆ, கஷ்டமே! என்று மேல்வரு
மாறு கதறுவாராயினன். ஓ பிரேமபுரீசுவரரே! நான் திர
விய வாஞ்சையினால் உன் திருத்தலத்தையும் இழந்து பிர
மாதிகளுக்கும் கிடைத்தற்கரிய உனது திருச்சேவையை
யும் இழந்தேனே, பிரேமபுரித்தலத்தில் நொடிப்பொழுதே
னும், அரை நொடிப் பொழுதேனும் வசிப்பவன் பிரமபத
த்தைப் பெறுவானென்று பிரமவித்துக்கள் சொல்லுகின்றா
ர்கள். அப்படிப்பட்ட தலத்தை எனது தௌர்ப்பாக்கியத்
தினால் இழந்தேன். என்னால் தேடப்பட்ட பொருள் முழு
வதும் கள்ளர் கையில் பறிகொடுத்தேன். ஓ, பகவானே!
இப்பொழுது மனிதரற்ற இக்காட்டில் பிராணன்களையும்
விடப்போகின்றேன். ஆ, திரிவேணியே, ஆ, சுவாமியே,
பிரேமலிங்கமே, சநாதனரே, ஆ, வர்க்கவடமூலேசரே,
பிரேமவல்லீசரே என்று இவ்வாறு வருந்தினவராய்க் கதறி
க்கொண்டு உயிர்களை இழந்துவிட்டனர். அதனால் அவர்

டீனவி பின்னர் அன்றில் பறவைபோலே பதறி வைராக்கியத்துடனே காசி நகரத்தை அடைந்தனள். பின்னர் மூன்று கரணங்களும் குவிந்து பிரேமலிங்கத்தைச் சிந்தித்து உயிர் விட்டமையால் சுசர்மாவானவர் பாவங்களினின்றும் நீங்கித் திரும்ப அப்பிரேமபுரியில் கௌசிகமுனிவருக்குப் புத்திரனாக ஜெனித்து, அவரால் சாதகன்மம் தொடங்கி உபநயனம் வரையிலுள்ள கிரியைகளையும் காசி யென்ற பெயரையும் பெற்று மிகுந்த பிரமதேசு விளங்கிப் பூர்வஜென்ம நினைவடைந்து, ரிஷிகளுக்குள் முந்தினவரும், புண்ணியவானும், சுத்த மனத்தினருமாகித் திரிகாலங்களிலும் திரிவேணியில் ஸ்நானம் செய்தும், அவ்வாறே பிரேமலிங்கத்தை அர்ச்சித்தும், மூவேடணைகளையும் ஒழித்தும், பிராணிகளையும் சமமாகப் பார்த்தும், ஓட்டாஞ்சில்லையும் காஞ்சனத்தையும் சரியாக மதித்தும் சீவன் முத்தராய்ப் பூமியில் சஞ்சரித்துப் பிரேமலிங்க பூஜையினால் மேலான முத்தியை அடைந்தனரென்று ஓதிய சூதமுனிவரைப் பார்த்து பின்னரும் பேசத்தொடங்கினர்.

பதினேழாவது அத்தியாயம் முற்றிற்று.

---

## 18-வது, பரதமுனிவர் பூசித்த அத்தியாயம்

ஓ, சூதமுனிவரே! பிரம வடிவுடன் விளங்கிய பரத முனிவரென்னும் மறையவர் பிரேமபுரீசரை எவ்வாறு பூசித்தனர். அக்கதையையும் உரைத்தருளும் என்று வினவிய நைமிச முனிவர்களை நோக்கிச் சூதமுனிவர் சொல்லத்தொடங்கினர். ஓ, நைமிச முனிவர்களே! சாளிகிராம அக்கிரகாரத்தில் வசிப்பவரும், கோபத்தை விட்டவரும், இந்திரியங்களை அடக்கியவரும், எவ்வுயிர்களிடத்தும் அன்புள்ளவருமாகிய பரதனென்னும் ராஜரிஷி கிருமதா நதிக்கரையிலிருந்து தவம் புரிந்தனர். அதுகாலையில் கருப்பம் நிறைந்த ஒரு பெண்மானனது புலியால் துரத்தப்பட்டு பயந்து கலங்கி அந்நதியின் மடுவினுள்ளே குதிக்கும்பொழுது அதி

ன் வயிற்றினின்றும் வெளிப்பட்ட குட்டி அப்பொழுது மடு
வில் முழுகி முழுகி எழுவதைக்கண்டு அம்முனிவர் விரை
வில் அதை எடுத்து, தனது ஆச்சிரமத்தில் வைத்துப், புல்
அளித்து பராமரித்துவர அதுவும் நாள்தோறும் அவரது
ஆச்சிரமத்தின் அருகே புற்களை மேய்ந்து, சஞ்சரித்துப் புத்
திரன்போல அவருக்குச் சந்தோஷத்தைச் செய்வித்து சாய
ங்காலம் ஆச்சிரமமுற்று அக்கினிஹோத்திர கிரகத்தில்
படுப்பதுமன்றி அம்முனிவருடைய மடியிலும் படுத்திருக்
கும் அம்மான்கன்றை முனிவர் மிகப்பயத்துடன் காட்டிற்
சஞ்சரிக்க விடுவார். இவ்வாறு சிலநாள் வசித்துவரக அம்
முனிவருக்குச் சர்மதிசை வரவே அம் மான்குட்டியும் அவ
ரை மூகர்ந்து முகர்ந்து கண்ணீர் ததும்பிப் பார்த்து நிற்க
அவரும் முன்னின்றதை நோக்கி இதனை எவ்வாறு விடு
வேன், சுவர்க்க பதவியை எவ்வாறு அடைவேன் எனது
சிசுவை எவன் இரக்ஷிக்கப் போகின்றான் என மிகச் சிந்தி
த்தனர். இவ்வாறு மான்கன்றை அடிக்கடி எண்ணி யெ
ண்ணிப் பிரமானு சந்தானம் செய்யும் அம்மகா முனிவரு
டைய பிராணன்கள் வெளிப்பட்டன. தேகியானவன்
முடிவில் எவ்விதமான எண்ணத்துடன் சரீரத்தை விடுகின்
றனோ அவ்வுருவத்தை அடைகின்றான் என்று பிரமவித்
துக்கள் சொல்லுகின்றனர்கள். அம்முனிவர் மான்கன்
றை நினைத்தே சரீரத்தை விட்டமையால் பிரமபுரித்தலத்
தில் தேவராத மறையவர் ஆச்சிரமத்தில் தமோகுணமு
டைய மான்குட்டியாக ஜெனித்தனர். அத்தேவராதமுனி
வர் நாள்தோறும் அதிதிபூஜை புரிகின்றவராதலின் அவ்
வதிதிகள் புசித்த உச்சிட்டத்தை அருந்தி அதில் பாளும்
விசேஷத்தினால் அவ்வுத்தம மான்கன்றானது நல்லறிவை
யும், தங்கமயமான வடிவையும் அடைந்து பின்னர் தனது
பூர்வஜென்ம நினைவெய்தி மனதுள் ஒழிவற்று முயற்சியின்
றிக் கிடைத்ததைக்கொண்டு சந்தோஷித்துக் காய்ந்த சருகு
களைப்புசித்து நக் குட்டைநீரை அருந்தித் தன் காலத்தை எதி
ர்பார்த்திருந்து நாளடைவிலே தனது உடலை வற்றச்செய்து

தனது மானுருவைவிட்டுத் திரும்பவும் அப்பிரேமபுரியிலே
யே பவத்திராத முனிவர் குலத்திலே பூர்வ ஞானத்துடன்
மறையவனுக்குச் சூதிவாயுவின் துன்பமின்றிப் பிறந்தும் அப்
படிப் பிறந்த உடனே உரோதனமுமின்றித் தாயின் மடியு
ற்றும், அவள் முகம் பாராமலும், பாலுண்ணாமலும் பரமா
னந்தமாகி யாவற்றையும் சின்மயமாகப்பார்த்து மௌனி
யாயிருக்கும் குழந்தையைப் பிதாவாகிய பவத்திராதமுனி
வர் அதிசயித்து நோக்கி அக்குழந்தைக்குச் சாதகன்மாதி
கிரியைகளைச் செய்தனர். சிலநாள் சென்றபின்னர் அக்கு
ழந்தை வீட்டுக்கு வெளியில் சஞ்சரித்துத் தவழ்ந்து வருந்தி
பிரேமலிங்கத்தின் சந்நிதி அடைந்து உலகனைத்தையும் அவ
ரது உருவாகப்பார்த்து நாடோறும் அங்கே இருந்தது.
பிரம உருவாயும், மகான்மாவாயும் உள்ள அக்குழந்தைக்கு
ஐந்துவயது நிகழ்கையில் பிதாவானவர் பலவந்தமாக வீட்
டிற்கு இழுத்துவந்து முறைப்படி உபநயனம் செய்து பின்
னிவர் நித்தியகன்மமாகிய சந்தியாவந்தனமும் செய்யவில்லை
பேசவும் இல்லை, நமது முகமும் பார்க்கவுமில்லை. ஆதலின்
இவன் ஊமையென்று மூடபோல விடுத்து விட்டனர்.
பின்னர் அவர் கந்தலை உடுத்துச் சடைதரித்து ஊமையன்
போலே யாவற்றையும் சிவமயமாகப்பார்த்து அங்கங்கே
சஞ்சரித்து வெற்றுண்டியேனும், அறுசுவையுண்டியேனும்
இன்னும் பலவித உண்டியேனும் கொடுக்கப் புசித்து ஒன்
றையும் நான் செய்யவில்லை; எல்லாம் மாயையின் குணங்க
ளால் செய்யப்படுகிறது அகங்காரத்தால் அறிவிழந்தவன்
நான் கருத்தாவென்று எண்ணுகின்றான் என்று நினைந்து
உயர்வு தாழ்வின்றி எவர்கள் ஏவும் காரியத்தையும் செய்து
வந்தனர். பலவிதமாகிய ஜகத்தைத் தன்னில் நித்தமும்
ஆச்சரியமாகப் பார்த்துப்பார்த்து ஆனந்த பரவசராகித் தேக
மும் பெருத்தனர். ஒரு சமயத்தில் சோள தேசாதிபதியா
கிய வீரராஜனென்பவன் இஃதாத்மா, இஃதநாத்மா என்ப
தை அறியவேண்டுமென்ற விருப்பத்தால் தான் குருவைய
டைய விரும்பிப் பல்லக்கின் மீதேறி மனம் களித்துவருகி

வழியில் செல்லும்போது அப்பல்லக்குச் சுமக்கும் போகிகளுக்குத் தலைவன் பருத்த தேகத்துடன் வழியில் நிற்கின்ற இவனை நோக்கிப் பல்லக்கின் முன்கொம்பைத் தாங்கெனலும் விரைவில் உடனே பரதமுனிவர் அவன் ஏவியபடியே மனக்களித்துச் சுமந்து செல்லுங்கால் பிபீலிகாதி ஜெந்துக்களினது ஆயுட்கள் வருந்துமேயென்ற எண்ணத்தால் தாண்டித்தாண்டிக் குதித்துக்கொண்டு வழியைப்பார்த்துச் சென்றனர். அதனால் பல்லக்கின் கொம்பசையவே தனதுடல் அசையவும், அது தெரிந்த அரசன் ஓ, போகிகளே! நீங்கள் பல்லக்கின் கொம்புகளை ஏன் இப்பொழுது அசைக்கின்றீர்கள் என்று பரபரப்புடனே வினவிய அவ்வரசனை நோக்கி அப்போகிகள் தலைவன் கூறவானாயினான். ஓ, அரசனே! எனது ஏவலினால் முன்கொம்பைச் சுமக்கின்ற பெருத்த தேகத்தை உடையவனும் யுவாவுமாகிய இவனிப்பொழுது இவ்வாறு அசைக்கின்றனன் என்று கூறிப் பிராமணோத்தமராகிய அப்பரத முனிவரை அரசன் முன்பிற்கொணர்ந்து விடுத்தனன். அவரைக்கண்ணுற்ற அரசன் அதிசயித்து மேல்வருமாறு சிலாக்கியமாகிய வாக்கியத்தால் பேசவானாயினான். நீ யுவாவாயும், பெருத்ததேகம் உடையவனாயுமிருந்தும் இப்பொழுதென்னை இளைப்படைந்திருக்கின்றாயோ? உன்னால் சுமக்கும் இந்தப் பல்லக்கின் கொம்பை ஏன் அசைக்கின்றாய்? பேசுவாயெனலும் மறையவர் புகல்கின்றனர். நான் யுவாவும் அல்லன். பெருத்தவனும் அல்லன். இளைப்புற்றவனும் அல்லன். இப்பல்லக்கின் கொம்பைத் தாங்குவோனும் அல்லன். சாக்ஷியாகிய சித்தேயாகினேன். ஒன்றுடனும் சேர்வனல்லன். பூமியில் பாதமும், அதில் கணைக்காலும், அதில் சாநுவும், அதில் தொடையும், அதில் இடையும், அதில் வயிறும், அதில் மார்பும், அதில் தோளும் இவ்வாறு முறையே தோளினாலன்றோ பல்லக்கின் கொம்புத் தாங்கப்படுகின்றது என்று உரைக்கவே அவ்வரசன் அவ்விப்பிரரை பிரமத்தை அறிந்தவர்கட்குள் சிலாக்கியமாகுவரென்று அறிந்து உடனே பல்லக்கி

னின்றிழிந்து அடிக்கடிப் பணிந்து ஓ, அந்தணரே! நான் தத்துவ நிலையை அறியவில்லை. ஆதலின் அதனை எனக்கு உபதேசித்தருளுமென்று பிரார்த்தித்த அவ்வரசனுக்கு அப் பூசுரர் தயவினால் எதனை அறிந்து மோக்ஷத்தை அடைவார்களோ அத்தத்துவத்தை உபதேசிப்பாராயினர். ஓ, அரசர் கோமானே! நீயும் நானும் இச்செகமனைத்தும் சச்சிதானந்த ரூபம் தத்துவமசி வாக்கியங்களால் இது சத்தியம். ஆத்மாவைக் காட்டிலும் இதனை வேறாகக் கொஞ்சமும் நினையாதே. கடகம், மகுடம் முதலிய பூஷணங்கள் ஆடகத்தைக்காட்டிலும் வேறோ. ஈச்சுரன் இந்திரியங்களை வெளிப்பார்வையாக்கிக் கெடுத்தனர். ஆதலின் ஜனங்கள் வெளிப்பார்வையாகவே பார்க்கின்றனர். ஆயினும் அநேகரில் ஒரு புத்திமான் மோக்ஷம் ஒன்றையே விரும்பி விஷயங்களை நோக்காமல் இதயத்துள் விளங்கும் ஆன்மாவைப் பார்க்கின்றனன். எல்லாப் பூதங்களிடத்தும் அந்தருயாமியாயிருப்பவனும், எங்கணும் பாவி இருப்பவனும், எவ்வுயிர்களினுள்ளும் மறைந்திருப்பவனும், கருமங்கட்கதிபதியும், எல்லாப்பிராணிகட்கு இருப்பிடமாவோனும், யாவற்றுக்கும் சாக்ஷியும், ஞானவானாயும், தன்னையன்றி வேறுவஸ்து அற்றவனாயும், ஒருகுண சம்பந்தங்களும் இல்லாதவனாயும், பல உருவினனாயும் விளங்கும் தேவனொருவனே. ஆகாயம் ஒன்றாயிருந்தும் வெளுப்பு, கறுப்பு, நீலம் முதலிய பேதத்தினால் பலவாகத் தோற்றுவதுபோல ஏகனாகிய ஆத்மாவும், சஞ்சல திருஷ்டியால் தனித்தனிக் காணப்படுகின்றனன். கண்குற்றம் கண்கள் நோக்கும் சூரியனை அடையாததுபோலச் சரீரத்துள்ள ஆன்மாவைச் சரீரதோஷம் அடையாது. எந்த ஆன்மாவை அறிந்தால் யாவற்றையும் அறிந்ததாகுமோ அந்த ஆன்மாவை ஒன்றாக அறியவேண்டும், வேறு வசனங்களை விடவேண்டும். சர்வபூதங்களின் இதய குகையில் இருக்கும் ஆன்மாவை எதுவலாயில் ஏகமாயும், அத்துவைதமாயும், எல்லாப்பூதங்களும் தன்னை அடையப் பெற்றதென்று ஒன்றாக அறிடவில்லையோ அது

வளையிலும் குணங்களோடு கூடிய ஈச்சுரனை உபாசிக்க
வேண்டும். மகம், தானம், தவம் அர்ச்சனைகளால் ஆன்மா
வை அறிய விரும்புகிறார்கள். பரபிரமத்தை அறிந்தவனது
இதயக்கிரந்தி பேதிக்கப்படுகின்றன. எல்லாச் சந்தேகங்க
ளும் சேதிக்கப்படுகின்றன. கருமங்களும் நசிக்கின்றன.
ஜெகமனைத்தும் ஆன்மாவைவிட்டு வேறு அன்று. ஒவிரு
தற்காரணமாகிய அணுக்கள்முதல் தேவர், மனிதர், பசுக்
கள், பக்ஷிகள், தருக்கள், சர்ப்பங்கள் என்னும் இவை யா
வும் சிவபெருமானைக் காட்டிலும் வேறுபட்டவைபோல்
இருப்பினும் அவரது உருவமே உலகத்தில் பார்ப்பவனும்,
கேட்பவனும், நினைப்பவனும், எங்கும் நிறைந்த அப்பர
பிரமம் அல்லது வேறொருவனன்று என்று உபதேசித்தரு
ளிய பூசுரோத்தமரிடத்தில இருந்த ஆன்மாவை அகண்ட
வடிவாக அறிந்து அவ்வரசர்கோமான் பரமாத்ம நிருவ்ருதி
அடைந்து, பேதநிருஷ்டையைவிட்டுத், தத்துவவஸ்துவைக்
கண்டு பேதத்தை விடுத்து அறிந்தனன் என்றுரைத்த சூத
முனிவரை நோக்கிப் பின்னரும் கேட்கத் தொடங்கினார்.

பதினெட்டாவது அத்தியாயம் முற்றிற்று.

---

## 19-வது வியாசர் பூசித்த வத்தியாயம்.

ஓ, சூதமுனிவரே! வியாசர் எவ்விதம் பிரேமலி
ங்கத்தைப் பூசித்தனர். அக்கதையும், எங்கட்குரைத்தரு
ளுர், கேட்க விருப்பமுடையேமென்று வினவிய நைமிசமு
னிவர்கட்குப் பின்னரும் சூதமுனிவர் சொல்லத்தொடங்கி
னர். ஓ, நைமிசமுனிவர்களே! கலியுகத்தில் உண்டாக
ப்போகின்ற மிகக் குறைந்த புத்திவான்கட்குக் கருணைபுரி
யும் நிமித்தம் சத்தியவதி புத்திரரும், ஷட்குண நிறைந்தவ
ருமாகிய வியாசபகவான் பலசாகைகளுடன் கூடிய வேத
மென்னும், பெரிய மரத்தை நான்காகப் பிரித்தருளச் சாக்
ஷாத் ஈசிங்கரையினின்று மெண்ணினர். அதுகாலே, அவர்
மனது சிறிது கலங்கி மிகவாகத் தெளியவில்லை. இஃதெ

ன்னையெனச் சிந்தித்தத் தருமான்மாவாகிய அவர் ஆகாய
த்தை நோக்கி ஒரு முகூர்த்தம் நின்றனர். அச்சமயத்தில்
ஆகாயத்தில் பராசரர் புத்திரரான இவரைக்குறித்து ஓ,பிரா
மணனே! என் வார்த்தையைக் கேள். நீ, கன்னிகையின்
வயிற்றில் பிறந்ததோஷம் உன்கண்ணிருப்பதால் மனக்க
லக்கம் வந்தது. ஆதலின் அத்தோஷத்தைத் தவத்தால் நன்
ருக விலக்கி, பின்னர் பரிசுத்த மனத்துடன் வேதத்தை நா
ன்காகப் பிரியென்ற ஓர் அசரீரி வாக்குண்டாக அதைக்கே
ட்டு முனிவர் தவத்தைச்செய்யவிரும்பி பலநற்றலங்களுற்ற
மகிதலத்தில் சஞ்சரித்தனர். பின்னர் காவிரி தீரத்தில் பல
வித க்ஷேத்திரங்களைக் கண்ணுற்ற மகாமுனிவர்களால் சே
விக்கப் பெற்றதும், நெருக்கமாகிய சோலையின் நிழல்களா
ல் மறைக்கப்பட்டதும், காற்றினால் குளிர்ந்ததும், காயத்
திரி, சாவித்ரி நதிகளின் நன்னீர்த் திவலைகளால் நனைந்த
பூமியை உடையதும், சிவசிவவென்று உறத்திக்கூவுங் கிளி
களால் நிறைந்ததுமான பிரேமபரிச்சலத்தை அடைந்து
நோக்கி ஆச்சரியம் உற்றனர். ஜைமினி முனிவராலும்,
பலமுனிவர்களாலும் பூஜிக்கப்பெற்ற அத்தலத்திலேயே
தவம் புரிந்தனர். நித்தியம் பிரேமலிங்கத்தையும் பூஜித்து
காயத்திரி சங்கமத்திலும் ஸ்நானம் செய்து, மனத்தை அட
க்கிச் சிறிதுகாலம் வசிக்கும் பொழுது மனச்சுத்தி அடை
ந்தனரென்று கூறிய சூதமுனிவர் வசனத்தைக்கேட்ட நை
மிசமுனிவர்கள் பின்னரும் ஜைமினி முனிவர் எதன் பொ
ருட்டுத் தவம் புரிந்தனர். அதனையும் அதிபுத்தியுள்ள வியாச
மாணாக்கரே! எங்கட்கு உரைத்தருளும் என்று வினவிய அம்
முனிவர்களைப்பார்த்துச் சூதமுனிவர் சொல்லுகின்றனர்.

ஓ. முனிவர்களே! முற்காலத்தில் அகிலதார்ஜமயான பர
மசிவனானவர் ஆனந்த வனத்தில் ரிஷிகள், தேவர்கட்கு
முன்னே ஆச்சரியமாக ஆனந்தத் தாண்டவம் புரிகையில்
காமிய வனத்தில் ஜைமினி முனிவரும், வியாக்ரபாதமுனி
வர் மனோஹரமான தேவதாரு வனத்திலும் தவம் புரிந்தி

ருந்தனர். ஷாட்குண்யரான பரமசிவன் அவர்களிடத்தில் சந்தோஷித்து ஓ, முனிவர்களே! காவிரிநதியுடன் விளங்குவதும், இரம்மியமானதும், பன்முனிவர்களால் சூழப்பட்டதுமாகியுள்ள புண்டரீக வனத்தில் தாண்டவம் செய்யப்போகின்றோம். நீவிர் அவணெய்துங்கள். உங்கள் விருப்பத்தைப் பெறுவீர்கள் என்று கூறிய இந்தமௌலியினுடைய இச்சுப வாக்கியத்தைக்கேட்டு ஜைமினி முனிவரானவர் சிற்சபையைத் தெரிசிக்க விரும்பி வியாசமுனிவரது வரவறிந்து சீடர்களுடன்கூட அங்கெய்தி இருந்தனர். பின்பு வியாசமுனிவர் ஜைமினிமுனிவர் முதலிய மகான்மாக்களாகிய பல ரிஷிகளோடு தேவ கந்தருவர்கள் சேவிப்பதும், பரிசுத்தமுமாகிய சிற்சபையை அடைந்து தூர்ச்சடியின் நடனத்தைப்பார்த்துக் கண்களைப் பிரயோசனம் அடைந்ததுகளாகச் செய்து வேதத்தை நான்காகப் பிரிப்பதற்கு ஸ்ரீகண்டரிடத்தில் நின்று அருளடைந்து வேத வித்தாகிய தவ முனிவர்களுடன் கூட சிலகாலம் அங்கிருந்தனர். ஜைமினியும், வியாக்ரபாதரும் ஆவலுடன் இந்தமௌலியின் ஆச்சரிய நடனம் கண்டு பரமானந்தம் பொருந்தினர். பின்னர் ஜைமினிமுனிவர் வேதபாதத்துதியால் சந்திரசேகரனைத் துதித்தனர். வியாசமுனிவரும் பலதிக்கிலிருந்து வந்த பலமுனிவர்களும் மோக்ஷதான்மியமாகிய அவ்வேத பாதத் துதியைக்கேட்டு மிகக் களிப்புற்றனர்கள். சனகனான சாக்ஷாத் விஷ்ணுவேயாகிய வியாசமுனிவர் சரஸ்வதி நதிதீரத்தை ஜைமினி முதலானவர்களுடன் அடைந்து உலகங்கட்குக் கருணை செய்ய விரும்பி வேதத்தை நான்காகப் பிரித்தனர். அவற்றுள் ஜைமினிமுனிவர் சாமவேதத்தையும், சுமந்து முனிவர் அதர்வ வேதத்தையும், காலவ முனிவர் இருக்கு வேதத்தையும், குசாக்கிர புத்தியாகிய வைசம்பாயன முனிவர் காண்டம், பதம், கிரமங்களுடன கூடிய எதிர் வேதத்தையும் கிரகித்தனர்கள். இந்நான்கு முனிவர்களும் அவ்வேதங்களைத் தத்தம் பெயர்களால் சங்கிதையாகப் பிரித்து மாணாக்கர்கட்கு அத்தியயனம் செய்

வித்ததால் அவ்வேதங்கள் வெகுவாயின. எதிர்வேதம் நூற்றொரு சாகைகளாகவும், இருக்குவேதம் இருபது சாகைகளாகவும், அதர்வவேதம் ஐம்பது சாகைகளாகவும், சாமவேதம் சகத்திர சாகைகளாகவும் ஆயின. அந்த வியாச முனிவரிடத்திலிருந்து இதிகாசங்களுடன் பதினெண் புராணங்களையும் புராணிகரான சூதமுனிவர் கிரகித்தனர். விஷ்ணு உருவாகிய வியாச முனிவரைக்காட்டிலும் எந்த சுபுத்திமான் வேதங்களைப் பிரிப்பான். வேதங்களைப் பிரித்தமையால் வியாசரென்னும் பெயரை அடைந்தனர். பிரமபுரீசரைப் பூசித்தமையால் பரிசுத்த மனமுடைய அப்பராசர் புத்திரரும், விஷ்ணு அம்ச பூதருமாகிய வியாசரானவர் வேதம் என்னும் பெருமலையைப் பிரித்துக் கருணையால் உலகங்களைக் காத்தனர் என்று கூறிய சூதமுனிவரை நோக்கிப் பின்னரும் கேட்பாராயினர்.

பத்தொன்பதாவது அத்தியாயம் முற்றிற்று.

---

## 20—வது, அளர்க்கராஜன் பூசித்த அத்தியாயம்.

சாமவேதத்தின் ஆயிரஞ் சாகையுள் ஓர் சாகை தலவகாரிணிப் பெயருற்றது எவ்வாறென்று வினவிய நைமிச முனிவர்களைப்பார்த்துச் சூதமுனிவர் சொல்லுவாராயினர். முனிவர்களே! பூமியில் ஜைமினி முனிவர் சீடரான தலவகாரரால் அச்சாகை விரித்துரைக்கப் பட்டமையால் தலவகாரிணி யெனப்பெயர் பெற்றது. அவரது மகான்களாகிய மாணாக்கர்களால் பிரமபுரி விளங்கப்பட்டது வென்றுரைக்கையில் சூதமுனிவரே! சனாதனமாகிய பிரமலிங்கத்தை எந்த அரசன் பூசித்தான் அதைையும் எங்கட்கு உரையும். கதையென்னும் அமுதபானத்தால் திருப்தி உண்டாகவில்லை என்று திருப்ப வினவிய அம்முனிவர்களை நோக்கிச் சூதமுனிவர் கூறுவாராயினர். ஓ, முனிவர்களே! முன்னோர் காலத்தில் காலவிசேஷத்தால் அப்பிரமபுரித் தல

மானது இது க்ஷேத்திரம், இது தீர்த்தம், இது விமானம் என்று சிறிதும் அறியக்கூடாதபடி மிக ஜீரணம் அடைந்திருக்கும்பொழுது அயோத்தியாதிபதியான் அளர்க்கன் என்னும் ஒரு ராஜன் தீர்த்தயாத்திரை செய்யவிரும்பிப் பலமறையவருடன் வெகு திரவியங்களை அநேக ஒட்டகக் குழாங்களிலேற்றிக் கொண்டு வெளிப்பட்டு கண்டகை, கௌசிகை, சரயு, கோமதி, திரிவேணிகளை அடைந்து காசியைய்தி கயைக்குச்சென்று அக்ஷய வடமூலத்திலும் விஷ்ணுபதங்களிலும் பிதிரரைக் குறித்துச் சிராத்தம், பிண்டதானம் புரிந்து பிதிரர்களைக் குறித்த தருப்பணாதி கருமங்களையும் புரிந்து பின்னர் துவாரகையை அடைந்து கோவர்த்தனகிரி, அலம்புஜகிரி, மதுராபுரி, யமுனைநதியையும் அடைந்து பின்னர் கோதாவிரி நதியையும் அக்னிசாலேச்சர க்ஷேத்திரம், கருமேச்சர க்ஷேத்திரம், மகாகாள க்ஷேத்திரம், இரணியரு க்ஷேத்திரத்தையும், சோமேசுவர க்ஷேத்திரத்தையும் அடைந்து பிறகு சரகாடவனத்தையும் அவ்வாறே காகோணம், சுத்திணபுரம், கௌமாரவனம், கோகர்ணம் இதுகளையும் அடைந்து, பின்னர் மூகாம்பித்தலம், சைத்திராரண்யம், விசாலக வனத்தையும், மணிகூடம், சித்திரகூடம், திரிகூடம் என்னும் பருவதங்களையும் கிருஷ்ணவேணி, பினாகி என்னும் நதிகளையும், சமபாதிவனத்தையும், அருணாசலத்தையும், திருக்காளத்தித் தலத்தையும், விருத்தகிரியையும், ஸ்ரீமுஷ்ண நகரத்தையும் அடைந்து பின்னர் தில்லாரணியத்தையும், சாயாவனத்தையும், திருவெண்காடு, வில்வாரண்யங்களையும், கும்பேசுரத்தையும், கமலாலயத்தையும், அக்கினிசம் ஏருமேனச்சரம், ஆங்குள்ள அமிர்தகடேசத்தையும், ஹரிநதிதீரத்துள்ள தேஜினிவனத்தையும், சாமுண்டேச்சரத்தையும், கும்பிசா க்ஷேத்திரத்தையும், காலீசுரத்தையும், அவ்வாறே காசார்ச்சுனத்தையும், திருவாஞ்சியத்தையும், நாகேசத்தையும், பிரமவர்த்தனத்தையும், மாயூரத்தையும், திரிகோடியையும், திருக்குற்றாலத்தையும், பஞ்சனேச்சரத்தையும், மத்தியார்ச்சுனத்தையும், கற்கடகே

சத்தையும், அவ்வாறே திருபுவனத்தையும், அவ்வண்ணமே கும்பகோணத்தையும் அடைந்து திருவலஞ்சுழியையும், முற்காலத்தில நந்திகேச்சுரருடைய வாய் நுரையாலும், சிவபெருமானுடைய சிரசிலுள்ள மதியின் அமுதத்தாலும், அவரது வெளவியிலுள்ள கங்கை நீராலும், சூரிய புட்கரணி தீர்த்தத்தாலும், காவிரிநதி தீர்த்தத்தாலும் ஐந்நதிகள் பெருகியதுபற்றித் திருவையாறென்னும் பெயருற்ற செப்பியேச்சர ஸ்தலத்தையும் அடைந்து, பின்னர் காயத்திரி நதியினும் வடதருவாலுங்குளிர்ந்துள்ள பிரமபுரி ஸ்தலத்தை அடைதலும் ஆங்குள்ள பரத்துவாஜராதி ஜைமினி முதலிய தபோதனர்கள் ஓ, அரசனே! இந்த பிரமபுரி ஸ்தலத்தில் பிரமபுஷ்கரணி தீரத்தில் ஸ்ரீமத் பிரமவிமானத்தில் பிரமவல்லியுடன் விளங்கும் பிரமலிங்கத்தை ஒருதடவை பணித்தவனுக்கு திரும்பச்ஜனனமுண்டாகாது பிரமலிங்கத்தின் வடபாலுள்ள பிரமபுஷ்கரணி தீர்த்தத்தைப்பார்த்தாலும் தொட்டாலும் அதிற்படிந்தாலும் மகா பாதகங்களும் விலகுமென அத்தலமான்மியத்தை இவ்வாறென்றெடுத்துரைக்கவும் அரசன்கேட்டு அவ்வாச்சரியத்தால் கண்குளிர்ந்து மனக்களிப்படைந்து மந்திரிகளுடன் நாடோறும் திரிவேணிசங்கமத்தில் தீர்த்தமாடி பிது கிரவியங்களால் அத்திருத்தலத் திருப்பணியைத் திருத்தப்படரியத்தொடங்கி, முன்னர் மங்களகரமாகிய பலவித தீர்த்தங்களைச்சோதித்து சிலாக்கியங்களாங் கோபுரங்களையும், மதில்களையும், மண்டபங்களையும், இருக்கமற மறைபவரில்லங்களையும், நெருங்கிய கடைவீதிகளையும், பலவித ஜனங்களுக்குத் தக்கவீடுகளையும், எதிர்களுக்குரிய மடங்களையும், சிவபெருமானுக்குரிய ஆச்சரியகரங்களான உத்தியானவனங்களையும், இதுடன் சிற்பிகளால் ஸ்ரீமத் பிரமவிமானத்தையும் நன்கு அமைப்பித்து மிக்கசந்தோஷத்துடன் சிலாக்கியமதியுடைய சக்கிரவர்த்தி முந்நவித மகோச்சவத்தை முடித்துத் ஜனகரோணைந்துடங்கப் பிரமலிங்க மகோத்சவத்தையும் நடாத்தச்செய்து வருநாளில் பற்பல திக்குக

ளிலிருந்து கூட்டங்கூட்டமாக வருகின்ற பிராமணர்கட்கு
ப்பக்ஷியம், லேஹியங்களோடுகூடி நிறைந்த அன்னத்தை
புஜிப்பித்தும், வித்வான்களுக்குச் சுவர்ணம், இரத்தினம்,
வஸ்திரங்களும் அளித்து, உத்தம வடதருக்கீழ் விளங்கும்
அறகுணா நிறைந்தருள் மகேச்சுரனைத் தன் மனைவிகளு
டனே வணங்கி ஆனந்தமடைந்தனன். பின்னர் கிங்கிணி
களாலும், துவஜபடங்களாலும், இரத்தினங்களாலும், நன்
ருய் அலங்கரிக்கப்பெற்ற சிலாக்கியமான இரதத்தில் ஆ
ரோகணித்து வருகின்ற தேவோரும் மங்கள உருவினரு
மாகிய பிரேமபுரீசரை சுவர்ணமலர்களால் நன்ருய்ப்பூசித்து,
அடிக்கடிச்சேவித்து, பரமானந்த பரிதனுகி அரசன் திரு
ப்தி அடைந்தானில்லை. இரதாரூடரான அப்பரசிவத்தை
பிரமேந்திராதி தேவர்களும் சேவித்தார்கள். இவ்வாறு
திருவிழா முடிந்த பின்னர், அரசன் மனம் களித்தவனுகி
அத்தலத்தில் தன் மனைவிகளுடனே பலமகங்களைச் சுயமா
கவே புரிந்தனன். அவ்வாறு செய்துவருகின்ற அம்மகத்
தின்கண் வந்த மகான்மாக்களான பிராமணர்கள் எவ்வெப்
பொருளை யாசிக்கின்றனரோ, அவ்வப்பொருளை அவரவர்
க்கு அளித்தனன். இவ்வாறு நிகழும் அவ்வியாக முடி
வில் அவன் மனதைச் சோதிக்கும் நிமித்தம் பார்வதி நாத
ரான பகவான் விருத்தரும் அந்தருமாகி ஓர் மறையவர்
போலே அழகுள்ள பார்வதியோடும் அரசன் அருகேகி, இ
ராஜசேகரனும் வேண்டியதைக் கொடுப்பவனுமாகிய அவ்
வரசனைப்பார்த்து. ஓகோ மிகுந்த கொடையுடைய அரச
னே! அழகுடைய இவள் என் மனைவி. எனக்குக் கண்கள்
இல்லை. ஆதலின் இவளழகை நோக்கும் நிமித்தம் உனது
இருகண்களையும் எனக்களித்து அகன்ற கீர்த்தியைப் பெ
றுவாய் என்று பிதநேசுரான விருத்தர் பிரார்த்திக்க அரசன்
மான்கொம்பினுல் தனது இருகண்களையும் தானே பிடுங்கிக்
கொடுத்தனன். பிற்பாடு ரிஷபத்துவஜராகிய பகவான்
பிரமாதிகட்கும் பெறுதற்கரிய தனது உருவத்தை அவ்வர
சனுக்கு அளித்தனர். அதுமுதல் அப்பிரேமபுரித்தலம்

தானம் செய்தற்கு உத்தமஸ்தலம் என்று எண்ணப்பட்டது
அங்குத் தவம் புரிகின்றவர்களும், முனிவர்களும் தேவத்
துவத்தை அடைந்தவர்களே. இவ்வாறு அளக்கவொண்
ணும் சக்கிரவர்த்தியினால் நன்குப் பூசிக்கப்பட்ட பிரேமப
ரீசர் இப் பூவில் காவிரி தீரத்தில் தன்னை அடைந்தவர்கட்கு
வேண்டுவனவற்றை அளிப்பவராக இப்பொழுதும் விளங்
குகின்றனர் என்று கூறிய சூதமுனிவரை நோக்கிப் பின்ன
ரும் கேட்கத் தொடங்கினர்.

இருபதாவது அத்தியாயம் முற்றிற்று.

---

## 21-வது, அகத்தியர் பூசித்த வத்தியாயம்.

எல்லாம் தெரிந்த சூதரே! கும்பயோனி மகாமுனி
வர் பிரேமலிங்கத்தை அர்ச்சித்தது என்னிமித்தம், அக்
கதையையும் எங்கட்கு உரையுமென்ற நைமிச முனிவர்க
ட்குச் சூதர் சொல்லுவாராயினர். ஓ, முனிவர்களே! எல்
லாத் தேவரும் முனிவர்களும் காசி ஸ்தலவாசியாகிய கலச
ஸம்பவ முனிவரை அடைந்து மேல்வருமாறு உரைப்பாரா
யினர். கீர்த்திமானும், ரிஷிகளில் சிறந்தவரும், எல்லையில்
லா மகிமைக்கிடமானவரும், பிரமகாந்தி உடையவருமாகிய
ஓ. அகஸ்தியரே! தேவரீர் இப்பொழுது உலகங்கட்குக்
கருணை புரிந்தருளல்வேண்டும். விந்திய என்னும் பெரிய
மலை அமக்கடி விருத்தியடைந்து ஆகாயத்தில் நாள்தோறும்
சஞ்சரிக்கின்ற சூரியனுடைய கதியைத் தடுத்தது. அதன்
வளர்ச்சியைக் குறைக்க உலகத்தில் உம்மையன்றி ஒருவ
ரையும் பார்க்கவில்லை. ஆதலில் தாம் தெக்ஷிண திக்கடை
ந்து அவ்வாறு பணித்தருளும் தபோதனரே! அதன் வள
ர்ச்சியைத் தணிப்பதில் நீரே சமர்த்தராகின்றீர். உமது
பிறப்பு ஜகத்தின் கண்மைக்கேயாகும். இச்சகத்திற்கு தே
வரீரே மேலானகெதி. நீரே தர்ம சொரூபர், நீரே தவத்
திற்கு முக்கியமான இடம். உலகத்தில் யாரினும் மேலா

னவரும் நீரே மந்திரம் அறிந்தவர்கட்குள் உத்தமரும் நீரே, எனத்துதித்த அவர்கள் வசனம் கேட்டு லோபாமுத்திரை பதியானவர் காசிஸ்தலப் பிரிவால் தமக்கு உண்டாகப்போகின்ற துக்கத்தை மனதில் அடைந்து ஓ, தேவர்களே! ஓ, முனீந்திரர்களே உங்களை இப்பொழுது வணங்கிச் சிரசில் அஞ்சலித்து அடிக்கடி யான் இதனை யாசிக்கின்றனன். இக்காசியை விட்டுக் கொஞ்சமும் பொறுத்திரேன். ஆதலின் எனக்கு இக்காசி வாசமானது வெகுநாள் இடையூறின்றிக் கிடைக்கும்படி உங்கட்கு என்கண் சிநேகமிருந்தால் செய்யுங்கள். பிரமனது பகலில் எட்டாவது பகல் திக்பதிகளுடனும், சந்திர சூரிய நக்ஷத்திரங்களோடும் கூடிய இந்திர பதவியும் நாசம் அடைகின்றது. பிரமன் வாழ்நாளாகிய இரண்டு பரார்த்தம் நசித்தும் காசியில் உள்ளவன் நாசமடையான் அல்லனா. காசியில் இருக்கின்ற முயல்களும், கொசுக்களும விளையாட்டாக அடைகின்ற பதவியை வேறு ஸ்தலத்தில் யோகம் புரிந்த யோகிகளும் அடையார்கள். யான் காசியைத்தவிர மற்றையோரிடத்தும் வசிக்க விரும்பேன். எனக்குத் தவம் புரிதலும் காசிவாசம், சிவபூஜை செய்தலும் காசிவாசம், அக்கினிகோத்திரம் செய்தலும் காசிவாசம், புண்ணிய தீர்த்தமாடலும், காசிவாசம் அயமேதம் செய்தலும், காசிவாசம் மேலான ஜபம் செய்தலும், காசிவாசம் மேலான ஞானமும், காசிவாசம் எனக்கு எல்லாம் காசியே. வாரணாசி க்ஷேத்திரத்தைவிட உத்தம க்ஷேத்திரம் வேறில்லை என்று கூறிய காசிஸ்தல வாசியாகிய மைத்திரா வருணியைப்பார்த்து அப்பொழுது அறுகுணம் நிறைந்தவரும், சிருஷ்டி கர்த்தாவும், எவரிலும் உத்தமருமாகிய மரீசிமுனிவர் சொல்லுகின்றனர். ஓ, அகஸ்தியனே! சாஸ்திரத்தில் மொழிந்த நியமத்தில் முயன்று உடையவர்கள் பெறுகின்ற உலகங்களும், யாகம் புரிந்ததனால் பெறுகின்ற உலகங்களும், காலம் கழிந்தால் நாசம் அடைகின்றதுகள். பரோபகாரம் செய்கின்றவர்கள் பெறும் உலகங்கள் ஒருநாளும் நசிப்பதில்லை. அவ

ர்கள் மனதில் சிவபிரானான எப்பொழுதும் வீற்றிருக்கின்றனர். இவ்வுலகத்தைத் தாங்குகின்றவர்கள் சேஷனும் அன்று, கூர்மமும் அன்று, திக்கயங்களுமன்று, பரோபகாரம் செய்பவனே. அப்பரோபகாரியின் நிமித்தம் இந்திரன் காலத்தில் மழை பொழியச் செய்கின்றான். அவர் நிமித்தமே சூரியன் உதித்து அஸ்தமிக்கின்றனன். ஒருக்காலும் பூமிக்குப்பாரம் மலையுமல்ல, வனமுமல்ல, பருப்பதமுமல்ல. பரோபகாரம் செய்யாதவனே பாரம். முன்பு ஒரு காலத்தில் ததீசிமுனிவர் உலோகோபகாரமாக முதுகு எலும்பை அளித்தனர். பரோபகாரிகட்கு ஒருபோதும் ஆபத்தே இல்லை. எப்பொழுதும் சம்பத்துண்டாகும். பரோபகாரத்தைக் காட்டிலும் வேறு தருமம் இல்லை. அதைவிடச் சிலாக்கியமானது இல்லை. எத்தீர்த்தங்களும் எம்மகங்களும், தவமும், சவுசமும், இந்திரிய நிக்கிரகமும், பொறுமையும், எல்லாத் தருமங்களும் பரோபகாரியிடத்தில் இருக்கின்றன; பரோபகாரியை நோக்கிச் சுவர்க்கத்திலுள்ள தேவர்களும், வணங்குகின்றனர். அவர்களைப்பார்த்து எமதூதரும் அஞ்சுகின்றனர். பிறர்க்கு உபகாரம் செய்யாதவன் இருந்தும் இறந்தவனே. பரோபகாரம் செய்ய விருப்பமுள்ளவன் தேவ உருவத்தை அடைகின்றனன். மோக்ஷத்தையும் பெறுகின்றனன். நூறு அயமேதம் இயற்றியும் ஆவதென்ன. கோடி கங்காதி ஸ்நானத்தாலும் ஆவதென்ன. இவை பரோபகாரத்தின் பதினறில் ஒரு பங்குக்கு ஈடாகா என்று கூறிய மரீசி முனிவர் வாக்கியத்தைத் தருமாண்மையாகிய மைத்திராவருணி முனிவர் மனம் நடுங்கிக் கேட்டு, காசியில் வசிக்கும் எனக்குப் பெரிய விக்கினம் வந்ததென்று மனத்தின் நினைந்து ஆ காசியே, வாரணாசியே. விசுவநாதா, ஆ தண்டி விநாயகா, ஆ தேகளீசா, என்னை இப்போது இங்கிருந்து வெளிப்படுத்த முயன்றீர்களே நான் உங்கட்கு என்ன அபராதம் செய்தேன். ஆ, காசியே, ஆ விசுவேசுரா, ஆ பவானியே, ஆ சேலியே, ஆ, கங்கையே, மணிகர்ணிகையே, ஆ டுண்டி விக்கினேச்சுரரே! அர

திர்ஷ்டத்தால் எனக்கு வேறிடம் போக நேரிட்டது. ஆ விந்தமாதவா, ஆ கதாதரா, ஆ திரிவேணியே, ஆ புண்ணியவடதருவே, ஆ பிரயாகையே, ஆ முத்தி மண்டபத்தின்கண் எழுந்தருளிய உத்தம லிங்கமே, உங்களைப் பூசிப்பதை நீங்கி வேறிடத்தில் போம்படி எனக்கு நேரிட்டதே என்று இவ்வாறு மகான்மாவாகிய கும்பயோனி முனிவர் பரிதவிக்கும் பொழுது ஆகாயத்தின்கண் ஆச்சரியத்தைச் செய்கின்ற ஓர் வாக்கு எழுந்தது. ஓ, பேரறிவையுடைய கும்பயோனி முனிவரே! நீர் துக்கியாதேயும், புண்ணியம் அளிக்கின்ற காவிரித்தடத்தில் செப்பியேசத் தலத்திற்கு மேற்கில் பிரமபுட்கரணிக் கரையில் பிரமபுரி என்னும் திருத்தலம் ஒன்றுள்ளது. அது தக்ஷிண காசியென்று மூவுலகங்களிலும் பிரசித்தி அடைந்தது. அக்காவிரி நதி இக்கங்கா நதியே. அச்சனாதனமாகிய பிரமலிங்கம் இக்காசி விசுவேசரே. அவ்வடதரு இவ்வக்ஷய வடதருவே, இவ்விந்து மாதவர் ருபநாராயணப் பெயருடன் அங்கு விளங்குகின்றனர். அப்பிரமன் அம்சமாகிய கணேசர் துண்டிவிநாயகரே. கயை, திரிவேணி, காசி என்னும் மூன்றிடமும் அங்கிருக்கின்றன. அக்ஷய வடவிருக்ஷமும் இருத்தலின் அது கயை என்னும் இடமே. காயத்திரி சாவித்ரிகளின் சேர்க்கையால் அத்தலம் திரிவேணித் தலமே. விசுவேசரலிங்கம் விளங்குவதால் அது காசி க்ஷேத்திரமே. கயை, திரிவேணி, காசியென்னும் மூன்றிடங்களிலுள்ளயாவும் அங்கிருக்கின்றன. ஆதலால் நீர் தெக்ஷணத்தை அடைந்து விந்தசயிலத்தை அடக்கிப் பிரமபுரியை அடைந்து பிரமலிங்கத்தைப் பூசியும் என்று சிவபிரானால் சொல்லுவிக்கப்பட்ட ஆகாச வாணியைக் கேட்டு அவ்வகஸ்திய முனிவர் சிவாக்கினை தள்ளத்தக்கது அன்றென்று தேவர் குழாங்களால் துதிக்கவும் முனிவர்கள் நன்றாய்ப் பூசிக்கவும் தனது பத்தினியுடனும் முனிவர்களுடனும் கூட ஔபாசனாக்கினியை அரணியில் தரித்துக்கொண்டு விசுவேசரையும் மாதவரையும், டுண்டி விநாயகரையும், கதாதரரையும், மை

ரவையும், காசியையும், குகையையும், கங்கையையும் ப
வானியையும், மணிகர்ணிகையையும் நமஸ்கரிக்கின்றேன்
என்று காசியிலுள்ள எல்லாத் தேவர்களையும் நமஸ்கரித்து
ஓ, வாரணாசியே! ஓ மேலான பெரும்பாக்கியமுடைய கா
சியே, விசுவேசரே, மாதவரே, பெரும் பாக்கியமுள்ள மணி
கர்ணிகையே யான் தென் திசைக்குப் போகப் போகின்ற
ேன். நீங்கள் எல்லோரும் கருணை புரிந்து பிரேமபுரித்த
லத்துக்கு எழுந்தருளுங்கள். நீங்கள் அங்கு விளங்காவி
டில் நான் திரும்பி இங்கு வந்து விடுவேன் என்று மகாதே
வரைப் பிரார்த்தித்துக் களிப்புற்ற முனிவர்கள் லோபா
முத்திரை இவர்கள் பின் தொடர்ந்துவர அக்கினி கோத்தி
ரத்துடன் தென் திசையைக் குறித்துப் பிரயாணப்பட்டு
ஐந்துகுரோச தூரம் வரையில் அடிக்கடி காசியைப்பார்
த்து மிகவும் வருந்தி வாரணாசியின் பிரிவாற்றாமையால் சகி
க்கக்கூடாத துக்கத்தைத் தங்களை அடக்கிக்கொண்டு பின்
னர் எல்லா முனிவரோடுங்கூட மனதுக்கு இனிய கதைக
ளால் அத்துக்கத்தையும் வழி நடத்தலால் உண்டாகிய துன்
பத்தையும் நீக்கி அடிக்கடி காசி மான்மியத்தை எண்ணி
எண்ணி வனங்களையும், நதிகளையும், சிறுகுளங்களையும், தடா
கங்களையும் கடந்து விந்தமலைப்பக்கத்திற்சென்று சூரியமார்
க்கத்தையும் மறைத்துப் பலகொடுமுடிகள் பொருந்தி விள
ங்குகின்ற விந்தகிரியைக்கண்டு தவச்செல்வமுடைய அவ்
வுத்தம முனிவரான அகத்தியர் ஓ, விந்தனே! தென்றிசை
யடைய விருப்பமுள்ள எனக்கு வழிவிடு. இவ்வளர்ச்சியை
யும் விடுவாயாக உனக்கு நன்மையுண்டாகுமென்று கூறியும்
அவரது வசனத்தைக் கிஞ்சித்தும் மதியாத அவ்விந்தனு
டைய கருவத்தை நோக்கித் தமது காற்பெருவிரலால் அக்கி
ரியைத் தரைமட்டமாய் அழுத்தினார். பின்னர் அக்கிரிபுருட
உருவத்துடனெழுந்து முனிவரை அஞ்சலித்து ஓ, [illegible]
ண்ய பரிபூரணராகிய முனிவரேறே! உமது மகிமை அளக்
கரியது. நான் எத்தனைகாலம் இப்படிக் கிடந்திருப்பேன்,
எப்பொழுது நிமிர்ந்துயர்ச்சியடைவேன், புருஷோத்தமரே!

உரைத்தருளவேண்டும் என்று நயந்து இவ்வசனங் கூறி
னன். அவ்வாக்கியங்கேட்ட அகத்திய முனீச்சுரர் ஓ பூத
ரமே! யான் இங்கு எப்பொழுது திரும்பி வருவேனோ
அதுவரைக்கும் இவ்வாறே இருப்பாயென்று அதனையடக்
கியருளித்தேவர்களை மகிழ்வித்துக் காவிரித்தடமுற்றப் பல
வித கழனிகளைப் பார்த்துக் காயத்திரி காவிரிகளின் சேர்க்
கையையுடையதும், வடதருநிழலால் மிகக்குளிர்ந்ததும்,
தெரிசனமாத்திரத்தில் பாவத்தைவிலக்குவதும், தெரிசிக்கி
ன்றவர்கட்கு அதிகமங்களத்தைக் கொடுப்பதுமாகியுள்ள
பிரேமபுரித்தலத்தை விரைவினெய்தி ஸ்ரீமத்பிரேமலிங்கத்
தையும், பிரமாத்மகராகிய விநாயகரையும், சுந்தரரூபியான
மாதவரையும், அக்ஷயவட விருக்ஷத்தையும் நோக்கி ஆனந்
தம்பொருந்தி ஆனந்தக்கண்ணீருற்றனர். பிறகு இழந்த
தனத்தை அடைந்தவன்போலே அகத்தியமுனிவர் சரீரத்
தில் மயிர்க்கூச்செறிந்து சிவபெருமானைக்கண்டு தழுதழுத்
த வாக்குடன் துதிப்பாராயினர். ஆ, ஆ! கருணாநிதியைக்
கண்டேன். தன்னிலாடுவோர்களால் ஆதரிக்கப்படுபவர்
களும், வெகுநாளாயுள்ள பாவங்களை விலக்கி நெற்றிக்கண்
ணையும், கூன்பிறைப்பூஷணத்தையும் அளிப்பவரும், பிர
மன் புரந்தரன் முதலிய தேவர்கள் விரும்பத்தக்கதுமாகிய
கங்கை யமுனைகளின் சங்கமத்தையும், இங்கெப்படி நான்
கண்டேன். ஆ ஆ, மாதவர் ஆதிசேடனது படாக்குழாங்க
ளிலுள்ள இலாக்கியமான ஆசனக்கூட்டங்களின் காந்தியி
னால் சிவப்பு நிறத்தைப்பெற்ற திருமேனியுடையவரும்
பிரமனைப்பெற்ற நாபிக்கமலத்தை உடையவரும், இலக்கு
மி பூமிகளுடைய கைக்கமலங்களால் வருடப்பெற்ற பாத
கமலங்களை உடையவரும், பெருத்த தோள்களிடத்து அசை
கின்ற மகர குண்டலங்களால் நன்குக அலங்கரிக்கப்பெ
ற்றவருமாகி இங்கு விளங்குகின்றனர். பார்வதி பதிக்கு
மேலாகிய அன்னைச்செய்யும் சங்கராகிய சதாசரரும்,
இங்கு விளங்குகின்றனர். இருவக்கூட்டங்களால் நன்றாய்
ச்சேவிக்கப்பட்டவரும், கதம்பவன வாசத்தில் விருப்பமு

டையவளும், கண்களுக்கு எப்பொழுதும் ஆனந்தத்தை
விளைவிப்பவளும், மனிதர்களுடைய சகல பாவங்களையும்
நொடிக்குள் பொடிப்பவளுமாகிய மணிகர்ணிகை இங்கு
தூர்ஜடியாகிய பரசிவனுடைய சன்னிதியில் தென்கீழ்த்தி
சையில் ஒருகுளமாகவுள்ளவளே. பிரசித்தமான மான்மிய
த்தை உடையவரும், ஊழிக்கனலின் சிகைபோலப் பிரகாசி
ப்பவரும் ஆகிய சகஸ்ராவேடயிரவர் என்று இங்கு விளங்கு
கின்றனர். ஆச்சரியம்? இவ்வனைவரையும் இங்குக்காண்கி
ன்றனன். உலகத்தில் கேதவனமென்று பிரசித்தமான
இத்தலமானது தன்கண் தேகவியோகம் அடைந்தவர்களின்
சிரங்களில் சந்திரகண்டங்களையும், இடைகளில் காந்தியு
ள்ள புலித்தோலாடைகளையும், அளிக்கும் பிரமஸ்மசான
மென்னும் ஆனந்தவனமே என்றுரைத்துத் தபோநிதியா
கிய கும்பஜமுனிவர் முனிவர்களுடன் கூடக் காயத்திரி,
காவிரிசங்கமத்தில் ஸ்நானஞ்செய்து, தேவதா திருப்திசெ
ய்து பிரமமயமானவரும், பாரதியுடன் கூடினவருமாகிய
டுண்டிவிநாயகருக்குச் சிந்தூரரேகையிட்டுப்பூசித்துப் பே
ணிகளையும், லட்டுகங்களையும் நிவேதித்து காசிவிசுவே
ச்வரரூபியான பிரேமலிங்கத்தையும், காசி விசுவேச்வரி
ரூபியான மங்களத்தைச் செய்கின்ற பிரேமவல்லியையும்,
நன்றாயருச்சித்துப் பிரேமபுட்கரணி தீரத்தில் ஸ்ரீ பூமியு
டன் விளங்கும் மாதவனைத் தொழுது, மல்லிகை மலர்களால்
நன்றாய்ப்பூசித்து, தண்டபாணியாகிய பயிரவரையும், சித்
தியளிக்கும் துர்க்கையையும், அத்தலவாசிகளாகிய முனி
வர்களுடனும் முறைபிறழாது அர்ச்சித்துத் தம்மைப்பேறு
பெற்றவர்களாக எண்ணினார்கள். கேளுங்கள், ஓ, முனீ
ந்திரர்களே! இவ்வாறு கும்பசமுனிவர் அருச்சித்த வடதரு
மூலத்து லிங்கத்தைக் காவிரியும் அருச்சித்துச் சுரநதியை
க்காட்டிலும் மேன்மை பெற்றனள் என்று கூறிய சூதமு
னிவரை நோக்கி நைமிசமுனிவர் பின்வருமாறு வினவுகின்ற
னர்.

இருபத்தோராவது அத்தியாயம் முற்றிற்று.

## ௨௨-வது. காவிரி பூசித்த அத்தியாயம்.

ஓ, எல்லாமறிந்த சூதமுனிவரே! காவிரி என்னிமித்தம் வடமூல லிங்கத்தைப் பூசித்தனள். எங்கட்கு மயிர்க்கூச்செறியும் அக்கதையையும் சொல்லுமெனலும் சூதமுனிவர் சொல்லுவாராயினர். நைமிசமுனிவர்களே! மிகுதேசுடையவரும் முனிவர்கட்குள் முந்தியவரும் நற்புத்தியுடையவருமாகிய பிருகுமுனிவர் கோடை காலத்தில் சலமில்லாமையால் தவித்துச் சரீரத்தில் வேர்வைத்துளியுற்று ஸ்நானம் செய்யவும் பானம் செய்யவும் விருப்பமுற்றுக் காவிரிக்கரை அடையுங்கால் கலங்கிய தீர்த்தத்துடனே பெருகும் காவிரியை நோக்கக் கோபமுற்று ஓ, காவிரியே! யான் தாகத்துடன் வந்தபொழுது ஜலம் கலங்கி வந்தமையால் நீ பாவிகளால் பாபமுறறவள் ஆதவை. சலசந்துக்களாலும் அவமதிக்கப்பட்டவளாதவை, பன்முகமாகவும் ஆகுவை என்று சபித்தனர். அச்சாபத்தால் காவிரி பாவிகளின் பாவத்தால் நிந்தையை அடைந்து, சலசந்துக்களால் அவமதிப்படைந்து, பிரமபுரித்தலம் வந்து அகத்தியனைக் கண்டு முன்பு சென்று நமஸ்கரித்து, முனிவரிற் சிறந்த பகவானே! முன்னமே பாவிகளின் பாபத்தால் நிறைந்திருந்த நான் திரும்பவும் பிருகுமுனிவர் சாபத்தால் என் கரையில் ஆடுகின்றவரும் உண்கின்றவரும் அவமதிப்பையடைந்து சலசந்துக்களாலும் பீடிக்கப் படுகின்றேன். ஆகையால் இப்பாப விமோசனத்திற்கு உபாயம் எவ்வாறுரையும் என்று வினவலும் அகத்திய முனிவர், ஓ பெரும் பாக்கியவதியே நீ தேவர்கட்குத் தேவராயும் மகாதேவராயும் விளங்குகின்ற பிரமலிங்கத்தைப் பூசை செய், சாபத்தினின்று விலகுவாய். பிரமசாபத்தை விலக்கக் காக்கச் சிவபெருமானேயல்லது வேறு யாவர் வல்லவர் ஆவார். காசிநாதராகிய இப்பிரமலிங்கத்தின் சந்நிதியில் காயத்திரி நதி உன்னுடன் கலந்ததால் இத்தலம் மிக விசேஷம் உடையதே. பிரமன், மால், மகேந்திரர்களும் இந்த லிங்கத்தை விதிப்படி அர்ச்சித்து

சாபம் விலகி முன்போல் ஆயினார்கள். ஆகலால் நீயும் அர்ச்சனை செய். பிரமாவே கணநாதராகி வாணியோடும் விளங்குகின்றனர். திருப்பாற் கடலில் அறிதுயில் கூரும் விஷ்ணுவும் பிரேம புஷ்கரணி தீர்த்தில ஸ்ரீ பூமிசமேதராய்ச் சுந்தர உருவினராய் விளங்குகின்றனர். இவ்வாறு மும்மூர்த்திகளும் விளங்குவதால் இது உத்தம க்ஷேத்திரமே என்று உரைத்த வசனம் கேட்டு நதிகளில் சிறந்தவளும், களங்கமற்ற சந்திரனையும் படிகத்தையும் ஒத்த திருமேனி உடையவளுமாகிய காவிரி தேவி நித்தியம் தன்னால் சூழ்ந்த தன் நீரினால் மங்கள உருவினராகிய இப்பிரேம புரீசரை அபிஷேகம் செய்து மல்லிகை, சிறுசெண்பகம், ஜாதி, செங்கழுநீர் எனும் மலர்களாலும், கூவிளம் துளபங்களாலும், நன்றாய் அர்ச்சித்து சிலகாலம் தவம் புரிந்தனள். அப்படிப் புரியுங்கால் பிரமாதிகளால் வணங்கத்தக்கவரும், கீர்த்திவாகிய சந்திரசேகருமாகிய ரிஷபத்துவஜர் அவளது சிறந்த தவத்தால் சந்தோஷித்து ஆடிமாதப் பூரணையில் அவளை நோக்கி மங்கள உருவினரும் சுபத்தைச் செய்பவருமாகிய ஓ, காவிரியே! உனது தவத்தால் களிப்புற்றோம். சையமலை முதல்சமுத்திரம் வரையுள்ள உனதிரு தீரங்களிலும் ஆங்காங்கு அனேக லிங்க உருவத்தோடு நாம் வசிக்கின்றோம். இவ்விடத்தில் பிரேமலிங்க உருவத்துடன் நாடோறும் உனக்கு சாந்நித்தியம் புரிகின்றோம். எமது சாந்நித்தியத்தால் காசித்தலத்தைக் காட்டிலும் இத்தலம் மேலாக விளங்குகின்றது. உனக்கு பிராமண [illegible] நீங்கியது. கங்கையிலும் உனக்கு மேன்மை அளித்தோம். பாபிகளின் பாபம் பொருந்திய கங்கை முதலிய எல்லா நதிகளும் துலா மாதத்தில் உன்னை அடைந்து அப்பாவத்தினின்றும் விலகுவார்கள். நமது அனுக்கிரகத்தைக் காட்டிலும் உனது பரிசுத்த விஷயத்தில் வேறு சொல்லத்தக்கதென்னை. இங்குள்ள நீ தக்ஷிண கங்கை. இக்காயத்திரி, யமுனை, வாணியும் அகமுகமாகப் பெருகுகின்றனள். ஆதலின் இந்த திரிவேணி சங்கமமே சந்தேகமில்லை. இங்கு புரியும் ஸ்நா

னம், தானம், ஜெபம், ஓமம் இவைகள் எல்லாம் பூரண பல த்தைக் கொடுக்கும். பல ஜென்மங்களில் எய்திய புண்ணி யங்களால் இந்த எமது ஸ்தானத்தை அடைந்து புரியும் அணுவளவாகிய தானமும் ஆலின் விதைபோல் ஆகின்றது ஓ, காவிரியே! புண்ணியமாகிய உனது தீர்த்தத்தில் ஸ்நா னம் செய்து நம்மை அர்ச்சிப்பவர்கள் நமது சாயுச்சியம் பெறுவார்கள். தாமரையில் உற்ற ஜலம்போல உன்கண் ணின்றும் பாவம் விலகியது. விளக்குகின்ற காவிரியே! காயத்திரி நதியுடன் சுகமாகப் பெருகுவாய். உந்நீரால் பக்குவம் செய்த ஒருபிடி சோற்றைப் பிராமணனுக்குக் கொடுப்பதனாலேயே நாம் திருப்தி அடைகின்றோம். சந் தேகமேயில்லை. யாம இங்கு அந்தணர் முகமாக அளிக்கி ன்ற நெய்யினால் கலந்த அன்னத்தினால் எவ்வாறு திருப்தி அடைவோமோ அவ்வாறு மகங்களாலும், தவங்களாலும் வேறு கருமங்களாலும் திருப்தி அடையேம். நீ பல முக ங்களாகப் பெருகுவது சோள தேசத்தில் உள்ளவர்களு டைய சிவனௌஷதத்தின்பொருட்டு பிரசித்தமாக விளங்க வும், பல ஜலஜந்துக்கள் உனது தீரத்தில் வசிக்கும் பாவி களை இரக்ஷிக்கும்பொருட்டு உன்னிடத்தில் மிகவும் உண் டாகுக என்று சூலபாணியாகிய தேவதேவன் வரமளிக்கப் பெற்று விளங்காநின்ற காவிரி தேவர்கள் துதிக்கச் சமுத் திர காமினியாகிக் கோபத்துடன் சபித்த பிருகு முனிவரு டைய சாபம் நீக்கி ஸ்ரீமத் பிரேமபுரிசரால் கங்கையினும் மேன்மை பெற்ற சந்தோஷம் அடைந்து அகஸ்திய முனி வரிடத்தும் ஆனந்தப் பெருக்கையுடைய முனிக்கணங்களி டத்தும் விடைபெற்றுக் காயத்திரி நதியுடன் கலந்து பலத ரங்கங்கள் பொருந்த விளங்கினள் என்று கூறிப் பின்னரும் கூறுவாராயினர்.

இருபத்திரண்டாவது அத்தியாயம் முற்றிற்று

---

## 23-வது, சுக்கிரீவன்பூசித்த அத்தியாயம்.

ஓ, நைமிச முனிவர்களே! உலகத்தில் யாவற்றையும் பரிசுத்தம் செய்கின்ற மேலான இக்கதையைக்கேளுங்கள். கருணை என்னும் புரத்தில் வசிக்கின்ற சங்கரனது மான்மியத்தை உரைக்கப்பிரமேந்திரர்களும் சமர்த்தர்கள் அன்றெனில் வேறு எவன் அதை அறிவான். ஆயினும் இப்பொழுது யான் என் புத்திக்கு இயன்றமட்டும் சொல்லுகின்றேன். முற்காலத்தில் வேகசாலியான வாலி என்னும் ஓர் வானரன் இருந்தனன். அவனுக்குத் தம்பியும் பெரும் பாக்கியசாலியுமாகிப் பிரசித்திப்பெற்ற சுக்கிரீவன் அந்த வாலியினால் இராச்சியம் இழந்து பூமி முழுவதும் சுற்றி ஒரு சமயத்தில் இருடிமூகப் பருவதத்தில் மதங்கமுனிவர் ஆச்சிரமத்தை அடைந்து அவரைப்பார்க்க விருப்புற்று அப்பொழுது மிகு மேன்மையுடைய அம்முனிவர் தவத்தில் தியானத்துடன் கூடி இருந்தமையால் அவரைக் காணமுடியாமல் பத்து வருஷம் வரைக்கும் அங்கே இருந்தனன். பின்னர் மிகு நல்லிசையுடைய அம்முனிவர் தியானம் ஒழிந்து ஆச்சிரமத்தில் நின்று வெளிப்பட்டுத் தன்னைப்பார்க்க விரும்பிச் சமீபத்தில் நிற்கின்ற சுக்கிரீவனைக் கண்ணால் நோக்கலும் உடனே சுக்கிரீவன் எழுந்து பாதங்களைப்பணிந்து ஓ முனிவரே! வாலியினால் இராச்சியம் இழந்து துக்கமுற்றிருக்கின்ற என்னை நோக்குவீர். நான் திரும்ப என திராச்சியத்தை எவ்வாறு அடைவேன். அதனைக் கருணையோடு உரையும். நீரே எனக்கு மேலான கதியென்று பிரார்த்தித்த சுக்கிரீவனைப் பார்த்து மதங்க முனிவர் விடை கூறுவாராயினர். ஓ, சுக்கிரீவா! துக்கத்தை விடுவாய் திரும்பவும் இராச்சியத்தை அடைவாய். அதற்கு பிரேமபுரம் என்று சிலாக்கியமான ஒரு புண்ணியத் தலம் இருக்கின்றது. அங்கெய்தி நல்ல நியமத்துடன் மகாதேவனைப்பூஜை செய். அவரது அனுக்கிரகத்தால் இராச்சியம் பெறுவாய். இது நிச்சயமென்று உரைத்த அவ்வார்த்தையினால் சுக்கிரீவன் மிகுந்த அன்புகூர்ந்து பிரேமபுரித் தலத்தை அடை

ந்து ஆங்கு அன்னம், வண்டாழ்வான், சாரசம் முதலிய பற வைகளால் விளங்குகின்றதும், மனதுக்கு இனிமையானது மாகிய பிரோம புட்கரணியில் ஸ்நானம் செய்து செபமும் முடித்து மனோஹரங்களான நீலோத்பலம், கரவீரம், அருச்சுனம், தும்பை, வெள்ளிலோத்திரம் இம்மலர்களா லும் வேறு மலர்களாலும் பத்திரங்களாலும் சங்கரனை அர் ச்சிக்கத் தொடங்கிப் பலநூற்றாண்டு அளவும் இவ்வாறு சிவபூஜை புரிந்து வந்தனன். பிறகு சந்தோஷம் அடைந்த தேவதேவனாகிய மகாதேவர் சுக்கிரீவனைப் பார்த்து ஓ சூரி யபத்திரனே! உன் தவத்தால் களிப்புற்றோம். உனது அபீ ஷ்டத்தை உள்ளபடியே அறிந்தோம். மிகு புசழுடைய இராமன் என்று ஒருவன் உன்பொருட்டு அவதரிக்கப் போ கிறான். அவனால் நீ இராச்சியத்தை அடைகின்றாய். விசார ப்படாமல் உன் ஊருக்குப் போவாய் என்று உரைக்க சுக்கிரீவனும் அங்கிருந்து தனது ஊர் புகுந்தனன். பின் னர் தசரத குமாரனாகிய இராமன், தம்பியாகியசவுமித்திரியு டன் இராவணனால் டலாத்காரமாய் அபகரித்துப் போக ப்பட்ட சீதையைத் தேட விருப்புற்று வனத்தில் வந்து பி ன்னர் சுக்கிரீவன் என்னும் வானரம் இருக்கும் இடத்தை அடைந்து சுக்கிரீவனும் தானும் உத்தம சக்கியம் அடை ந்தனர்கள். பின்பு சுக்கிரீவன் உத்தம சகாவாகிய இராம னைப் பார்த்து ஸ்வாமி! நீரும் எனது சத்துருவாகிய வாலி யை யுத்தத்தில் ஜெயித்து வெற்றி பெறச்செய்யும். நானும் இப்பூவில் சீதை இருக்குமிடத்தை வானரர்களை ஏவி அறி விக்கின்றனன் என்று உரைக்க இராகவன் வேகசாலிகளில் சிறந்த சுக்கிரீவனை நோக்கி பலவான்களில் சிறந்த வாலி யைக் கோபத்தோடு யுத்தத்தில் கொல்கின்றேன் எனலும் கர்சனை புரிந்த மிது பத்திமானாகிய அச்சுக்கிரீவனுடைய பேரொலியைக் கேட்டு பலவானான வாலி கோபத்தால் க லங்கி அவனைச் சொல்ல விரும்பி விரைவில் யுத்தம் செய்ய எதிர்ந்தனன். எதிர்த்த அளவில் அவ்விருவர்களும் ஒருவ ரோடொருவர் கைமுட்டிகளாலும், முழந்தாள்களாலும், பா

தங்களாலும், சிரங்களாலும் மிகவிளங்காநின்ற யுத்தம்புரிந்தனர்கள். புரியும்போது சுக்ரீவன் வாலியைக் குத்த அவனும் சுக்கிரீவன் தலையில் கைமுட்டியால் புடைக்கவும் அதனால் சுக்கிரீவன் வருந்தினன். இவ்வாறவனை அடிபட்டு வருந்தியவனாக அறிந்து இரகுபுங்கவன் தங்கக்கட்டுடன் கூடியதும், கழுகிறகு கட்டியதும், கணுக்குறுகியதும், கூர்மை உடையதுமாகிய பாணத்தால் யுத்தத்தில் வாலியின் மார்பில் அடித்தனன். அவ்வாலி அடியால் உயிரிழந்து யுத்த பூமியில் விழுந்தனன். இவ்வாறு இரவி குலத்தில் ஜெனித்த இராமன் வாலியைக் கொன்று பின்பு தாண்டுவோர்களில் சிறந்த சுக்கிரீவனை இராச்சியத்தில் அபிஷேகம் செய்வித்து சந்தோஷிப்பித்தனன். சுக்கிரீவனும் மிகக்களித்து அனுமான் முதலிய வானரங்களால் அச்சீதை இருக்கின்ற இலங்கையையும் அரக்கர்களையும் அறிந்து மிக உத்தமமான சீதையின் இருப்பை இராமனுக்கு விண்ணப்பஞ்செய்தான். இலங்கையென்னும் மனோகரமானபுரி, மகன்திசையிலிருக்கின்றது. சமுத்திரத்திற்கும் அவ்விலங்கைக்கும் நூறுயோசனை தூரமுள்ளது. ஓ, இராகவனே! கலங்காத சமுத்திரத்தை நான் வானரர்களோடு தாண்டி உம்முடைய மனைவியைக் கவர்ந்தவனாகிய இராவணனை யுத்தத்தில் செயிக்கின்றேன். இராகவா உமக்கொரு காரியஞ்சொல்லுகின்றேன். அதனை நீர் உண்மையாகக்கேளும். மனிதர்களுக்கு எல்லாச்சித்திகளையும் அளிக்கும் மஹேசானாகிய பிரேமபுரீசனை அத்தலமுற்று விதிப்படி பூசைபுரியுமென்றுரைக்க அதனை அன்புடன் கேட்டு, உடன்பிறந்தவனாகிய இலக்குமணனோடும் தருமவற் சலனான இராகவன் அப்பிரேமபுரியடைந்து; மஹேசனைச் சாத்திரமுறையே பூசித்து வேதாந்தங்களில், விஸ்தரிக்கப்பட்ட சிலாக்கிய வாக்கியங்களால் துதித்தனன். உலகநாதா! சங்கரா! உலகங்களாற் பூசிக்கத்தக்கவரே! வேதாந்தத்தின் உண்மையால் யோசிக்கத்தக்க சொரூபத்தை உடையவரே! சம்புவே, கருணைக்கடலே, நீர் சராசரங்கள் எவற்றையும

இயக்குகின்றவராதலால் எனக்கு அனுக்கிரகம் புரியும், மலையரசன்மகள் பொருந்தும் இடைப்பாகத்தை உடையவரே! கிரீடகோடிகளால் விளங்குகின்ற உத்தமாங்கத்தை உடையவரே! இந்தத் தயாநகரத்தினுக்கும், எல்லா ஐசுவரியங்கட்கும், ஆதிகாரணரும், விருப்பின் அதிகரித்த செல்வம் அளிப்பவரும், விளங்குகின்றவரும், ஈசரும், வேறுநாதனை அடையாதவரும், மிருடாணீபதியுமாகிய உம்மைச்சரணம் அடைகின்றேன் எனத்துதித்த வளவில்,மகாதேவராகிய ஈசுவரன் பிரஸன்னராகி, ஓ, இராகவா! உனது துதியால் யாம் களிப்புற்றேமெனலும், இராகவன் மனக்களிட்டெய்தி நான் இராவணனை யுத்தத்தில் அவனது மித்திரர், ஞாதி, பந்துக்களுடன் சயித்து ஜானகியை அடைந்து அயோத்திக்குப் போகவேண்டுமென்று பிரார்த்தித்தனன். அப்படிப் பிரார்த்திக்கவும், முன்னர் தகப்பன் வாக்கியத்திற்குக் கட்டுப்பட்ட அவ்விராமனைப்பார்த்துச் சம்புவானவர் நீ சேனைகளுடன யுத்தத்திற் கலங்காதவனாகிய இராவணனைச்சங்கரித்து சீதையை அடைந்து சந்தோஷமுற்று, அயோத்தியையும், அடைவாய். இப்பொழுது உனக்கு, மிது சம்பத்து உண்டாகப்போகின்றது என்றுரைத்து, ஆங்கே மறைந்தனர். தருமாத்மாவாகிய இராமனும் சமுத்திரங்கடந்து, இராவணனை யுத்தத்தில் புத்திரன்,ஞாதி, பந்துக்களுடனே சங்கரித்துவென்று சீதையை அடைந்து, இராச்சியத்தையும் பெற்றுச் சுகித்திருந்தனனென்று கூறிய சூதமுனிவரை நோக்கிப் பின்னருங்கேட்பாராயினர்.

இருபத்திமூன்றுவது அத்தியாயம் முற்றிற்று.

---

## 24—வது, இராமர் பூசித்த அத்தியாயம்.

ஓ, சூதமுனிவரே! தலவகாரசிடர்களால் பிரேமபுரி விளங்கியதென்று தேவரீர் முன்னம் உரைத்திர். அவ்விருத்தாந்தத்தையும் கூறும். அத்தலம் அவர்கட்கு இருப்பிடமாகியது எவ்வாறு, மயிர்க்கூச்சல் விளைக்கும் அத்தலத்தில்,

நடந்ததையும், நடக்கப்போகின்றதையும், [illegible]ச் சொ
ல்லுமென்று வினவிய நைமிசமுனிவரைப்பார்த்துச் சூதமு
னிவர் சொல்லுவாராயினர். ஓ, முனிவர்களே! முற்கா
லத்தில், தசரதகுமாரராகிய இராமர் புலத்தியகுலத்துதித்த
வனும், உலகத்தைப் பீடிக்கின்றவனுமாகிய இராவணனை
ப்புத்திரர்களோடும் பந்துக்களோடும் கூட யுத்தத்திற் சங்
கரித்து அவனுடைய தம்பியாகிய விபீஷணனை இலங்கை
யிற் பட்டாபிஷேகம் செய்வித்தும் சிநேகிதர்களுடனே
சமுத்திரத்தின் வடகரையை அடைந்து, இராவணன் பிரம
வம்சத்தில் சன்மித்தவனாதலின் அந்த பிரமஹத்தியை வி
லக்கும் வண்ணம் ஆங்கும் சீதையுடன்கூட தனதுபேரால்
ஓர் இலிங்கத்தைத்தாபித்துப் பிறகு புண்ணியபூமிகளால்
சூழப்பெற்ற காவிரிதீரத்தை அடைந்து அத்தீரத்தைக்கண்
ணுற்று மனக்களிப்பெய்தி வஸிஷ்டமுனிவருடைய உத்
திரவினால் இருகாவிரிகளின் தீரங்களிலும், எல்லாச்சாமக்
கிரிகளும் நிறைந்துள்ள நானூறு கிரகங்கள் பொருந்தப்
பதினெண்கிராமங்களை யேற்படுத்தி, அவ்வொவ்வொருகிரா
மத்திற்கும் நானூறு விளைசெய் நிலங்களையும் அமைத்து,
தனித்தனி அப்பதினெண் கிராமங்களிலும், வசிஷ்டர், விசு
வாமித்திரர், பரத்துவாசர், பிருகு, கசியபர், ஹரிதர், வாது
லர், முற்கலர் இவர்கள் மரபில் வந்தவர்களும், சாமவேதிக
ளுமான மறையவர்களை மேல்வருமாறு தாபித்தனர். உது
த்தியம், சித்திரம் என்னும் இரண்டு இருக்குகளால் கானம்
செய்யப்படுகின்ற ஜேஷ்ட ஸாமம் மேலானதுபற்றி அத
னைக் கானம் செய்பவர்களும், மேலானவர்களே. தபாச்சா
பீயமென்னும் பெயரையுமுடைய இந்த ஜேஷ்டஸாமம்
தலவகாரசாகையில் கானம் செய்யப்படுகின்றது. கேனோ
பநிடத்துடன் கூடிய தலவகார சாகைகளுக்குச் சிலாக்கிய
மான ஆயிரத்து நானூறு பிராமணங்களும், நாற்பத்தெட்டு
க்கண்டங்களும், எண்ணாயிரம் ஸாமங்களும், உள்ளன.
இவைகளுள் பதின[illegible]க்கு ஸாமங்கள் எவனது நாநுனியில்
இருக்கின்றனவோ அவனே சாக்ஷாத் சிவபெருமானென்று

எண்ணப்படுவாரென்றான். ஆதலால் அத்தலவகார சாகையை யுடைய விப்பிரர்களே தானத்துக்குச் சிலாக்கியர்கள் என்று திமிர்ந்த புயங்களை உடயவரும், இரகு குலத்திற் செனித்தவரும் நற்புத்தியை உடையவருமாகிய இராமர் பதினெண் கிராமங்களையும், அவர்கட்கே கொடுக்கக்கருதி முந்தி பிரேமபுரி கிராமத்தில் எல்லாச் சாமகிரிகளும் நிறைந்த நானூறு கிரகங்களை அத்தலவகார சாகிகளுக்குள், நானூறு விப்பிரர்களுக்குச் சிதாசமேதராய் உதகதாரையை முன்னிட்டுத் தானம் செய்தனர். அப்பொழுது பிரேமபுரீசரானவர் பூர்வ சிகையுடைய விருத்தமறையோராய் மிகுந்த தேசினால் சூரியன் அக்கினிகளை ஒத்து கால்களில் பாதகுறடணிந்து, கையில் குடைதரித்து, வாயால் மந்திரமொழிந்து பாரியுடன் கூடினவராகி இராமனை அடைந்து எனக்கொருவீடளிப்பாயென்று யாசித்தனர். இவ்வாறு யாசித்த அவனைக்கண்டு ஆச்சரியத்தால் கண்குளிர்ந்த இராமன் இந்த நானூறு விப்பிரர்கட்குள் இவ்வொருவரே மேலாகுவாரென்று துதித்துச் சிதாசமேதராக அவருக்கும் ஒரு நல்ல கிரகத்தை அளித்தனர். பின்னர் அவ்விராமன் மற்றைய பதினேழு கிராமங்களையும், இவர்களை ஒழிந்த பற்றைய விப்பிரர்கட்குத் தானம் கொடுத்தனர். இவ்வாறு தானம்புரிந்த சில கிராமங்களின் பெயர் நவநீதேசரால் விளங்குகின்ற நாகார்ச்சுனம்,காவிரியின் உத்தரத்தடத்தில் சுவேதாதித்திரத்தில் சிவபெருமான் தானே விளங்குகின்ற வாசிஷ்டபுரம், சாமுண்டீசரால் விளங்கப்பெற்ற உடாநதி, சாந்தம்முதலிய பதினெண்கிராமங்களே இவற்றுள் பிரேமபுரி மேலானது. அதுமுதல் தலவகாரசாகிகள் அக்கினிகோத்திரம் புரிபவர்களாகிய விப்பிரர்கள் காவிரிகளின் இருபக்கங்களிலும் இருந்தனர்கள். அத்தலவகாரசாகிகளான அம்மறையவர்கள் பிரேமபுரிஸ்தலத்தில் ஆயிரம் வாஜபேயயாகங்களைட்புரிந்து அதனால் பிரேமலிங்கத்தின் கருணையைப்பெற்று நிகரற்ற தனவான்களாயினர்கள். ஓ முனிவர்களே! இனிமேல் வருகின்ற கலியுகத்தில் ஆச்சரி

த்தை இப்போழுது கெளுங்கள். சலவகார சாகையானது
சுரங்களும், இலக்கணங்களும் குறைபடப் போகின்றன.
அப்பொழுது பவத்ராதமுனிவருடைய சிடராகச் சபாபதி
ப்பெயருடன் அபரசிவனேபோல் கலியில் ஜெனிக்கப்போ
கின்ற ஓர் விப்பிரர் சிவானுக்கிரகத்தால் தாரணமென்னும்
இலக்கணத்தைப் பாணிக்கிரியாதந்திரத்தால் பழகிய பின்
னர் அச்சாகையை இலக்கணமும், சுரமும் உள்ளனவாக
ச்செய்து, பின்னர் அவைகளை மனத்துள் அடக்கினவராய்
தலவகார சாகிகளுடைய பதினெண் கிராமங்களினும்
உள்ள குண்டலங்களால் விளங்குகின்ற முகங்களை உடைய
வரும், வாஜபேயம்புரிந்துபெற்ற சத்திரங்களால் தடுக்கப்
படும் வெய்யிலை உடையவர்களுமாகிய விப்பிரேந்திரர்களை
க்கண்களுக்கு ஆனந்தத்தைத் தருகின்ற பிரேமபுரிஸ்தலத்
தில் அழைத்து அத்தலவகார சாகையில், நியமத்தால் அழகு
பொருந்திய கானத்தை உடையதும், அச்சாகிகட்கு மிக
ப்பிரேமை அளிக்கின்றதுமாகச் சுரலக்ஷணத்துடன் தன
ளுல் செய்யப்பட்ட சாமத்தைத்தனது கைக்கண் விளங்கும்
வீணையில் கணேசர் சன்னிதியில் வித்தியாசமின்றிக் கானம்
செய்யப்போகின்றனர். அக்கானம் கேட்டு மிகக்களித்த
கஜமுகர் தமது செவியை உயர்த்திக்கேட்டுக்கொண்டிரு
க்கப்போகின்றனர். அதனால் அத்தலத்தில் அவருக்குச் சா
மவேதி விக்கினேசர் என்கின்ற பெயர் உண்டாகப்போகி
றது. பின்னும் தூக்கிய கழுத்தை உடையவரும், வலது
கையிற் றுதிக்கையைத் தாங்குகின்றவருமாகிய மேலான
அக்கஜமுகனை அச்சபாபதிமறையவர் சிரத்தால்வணங்கி
ப்பன்மலர்களாற்பூசித்து பலநாள்களிற் கானம்புரிந்து அத்
தலத்திலேயே மேலான ஐசுவரியம்பொருந்திய பரசிவ
த்தை அடையப்போகின்றனர். அதற்குள் இவ்வாறவரும்
கலியுகத்தில் அச்சபாபதி மறையோர் கானத்தைக்கேட்டு
வசிஷ்டபுரவாசிகளான விப்பிரர்கள் ஒப்புக்கொள்ளப்போ
கின்றார்கள் இல்லை. பிறகு மற்றைப் பதினேழு கிராமவா
சிகளான மறையவர்கள் கோபங்கொண்டு நீங்கள் இச்

சாகை ஒழிந்த வேறுசாகைகளை அடையுங்களென்று அவர்களைத் திக்கரிக்கப்போகின்றார்கள். ஓ, பூசுரோத்திரர்களே! இப்பொழுது ஸ்ரீ வடதருமூலத்தில் வசிக்கின்றவரும், கருணைக்கடலுமாகிய பிரேமபுரேசருடைய மான்மியத்துடன் தலவகார சாகிகளுடைய மான்மியத்தையும் உங்கட்கு உரைத்தனனென்று பின்னரும் உரைப்பாராயினர்.

இருபத்திநான்காவது அத்தியாயம் முற்றிற்று.

---

## 25-வது, பிரேமன் முத்தியடைந்த அத்தியாயம்.

ஓ, சவுனகாதி முனிவர்களே! அப்பிரேம புரத்தில் நடந்த ஓர் இடையன் கதையைக் கேளுங்கள் எனச் சூதர் சொல்வாராயினர். அத்தலத்துள்ளவனும், சிவபக்தனும், மித சர்மவானுமாகிய பிரேமனென்னும் ஓர் இடையன் கோயில் பசுக்களுக்குப் புல்லையும் அன்னத்தையும் அளித்து ரக்ஷித்து வருவானாகி அப்பசுக்கள் தரும் பாலையெல்லாம் குடங்களில் நிறைத்துப் பிரேமலிங்கத்தின் அபிஷேகத்துக்குச் சிரத்தையோடு அளித்தும் அவிமாடுகள், காளைகள் இவைகளை விற்றுப் பெற்ற தனத்தையும் களிப்புடன் பிரேம லிங்கத்துக்கு அளித்து வருவான். சிவசொத்தென்று கொஞ்சமும் தான் திருடுகிறதில்லை. அவனுடைய புத்திரர்களும் பௌத்திரர்களும் திருடுகிறதில்லை. எல்லாப் பசுக்களுக்கும் அதிகாரியும் கணக்கனும் தனத்தில் பேராசைக்காரனுமாகிய வசி என்பவன் இவ்வாறு நிகழும் ஒருசமயத்தில் அத்திரவியத்தை இரகசியமாகக் கிரகிக்க விரும்பிக் கோபாலனாகிய பிரேமனைத்தனியே வருவித்து அவனைப்பார்த்து ஓ, பிரேமனே! நீ எவ்வுபாயத்தினாலேனும் சாவதானமாக எனக்குத் தனத்தைக்கொடு. நான் உன்பேரில் கோளுரை சொல்லேன். நான் கேட்ட தனத்தை அளியாயேல் உனக்குப் பெரிய அனர்த்தம் விளையும் எனத் தனக்கிரகணத்தில் ஆசையுடைய வசி தனங்களை வாங்குவதற்

காக அவ்விடையனை அதட்டியும் ஆசை வார்த்தையினாலும் இன்னும் பலவிதமாய் பயமுறுத்தியும் பிரேமன் சிவசகாயத்தால் பயமொழிந்து ஓ வசியே! நான் சிவசொத்தைக் கொஞ்சமேனும் என்னால் எடுக்கலாகாது. பால், தயிர், நெய் யாவும் சிவபெருமான் பொருட்டே அளிக்கின்றேன். சிவத்துரோக பயத்தினால் கொஞ்சமும் கவரவில்லை. தனக்குச் சுகத்தை விரும்புகின்றவன் சிவசொத்தைக் கிரகிக்கமாட்டான் என்றுரைத்து அவனுக்குச் சிவதனத்தில் கொஞ்சமும் கொடாததினால் கணக்கனாகிய வசி கோபமடைந்து அதிகாரியினிடத்தில் இப்பிரேமன் எருது, பால், நெய், தயிர்களை விற்று வெகு தனங்களைத் திருடித் தனவான் ஆனதினால் இவன் தெண்டிக்கத் தக்கவனாகின்றான் என்று பொய் வார்த்தையினால் அப்பிரேமன் பேரில் வெகு கெடுதல்களை உண்டாக்கி அவ்வதிகாரியினால் மிகத் தண்டிப்பித்துக் காலில் விலங்கும் இடுவித்துச் சிறைச்சாலையை அடைவித்தனன். இவ்வாறு சிறைச்சாலை அடைந்த இடையன் பாதிராத்திரியில் தனியே வருந்தி பிரேமலிங்கத்தை நினைத்து நினைத்து நான் சிவசொத்தைக் கொஞ்சமேனும் ஒருகாலத்திலும் சொற்பனங்களிலும் கிரகிக்க இல்லை. பால்விற்றது முதலிய காரியங்களைச் செய்கின்ற எனது புத்திரர் பவுத்திரர்களும் சிவத்துரோக பயத்தினால் கொஞ்சமும் அபகரியார்கள். மிகு துஷ்ட சுபாவமுடைய கணக்கனாகிய இவ்வசி என்னை வீணில் வருத்துகின்றான். ஓ, ஸ்வாமியே! மகிமை தங்கிய பிரேமலிங்கமே, பத்தர்கள் தத்தைத் தவிர்ப்பவனே, வடதருமூலத்தீசனே, உனகது என்பேரில் தயை இல்லையா என்று பொறிகலங்கித் துதித்துக் கண்ணீர் ததும்பப் புலம்பிக் கொஞ்சம் நித்திரை புரிந்தனன். பின்பு அவ்வர்த்த ராத்திரியில் சங்கராகிய வடமூலநாதர் பால் அன்னத்தைத் தாமே எடுத்துக்கொண்டு அச்சிறைச் சாலையின் கதவருகில் வந்து பிரேமா, பிரேமாவென்று அழைத்தனர். அதுகேட்டு விழித்துக்கொண்டு அவனும் அப்பொழுது பயந்தவனாகி ஓ, கணக்கனே! நீ அர்த்தராத்திரியிலும் வருத்த அழைக்கி

ன்றாய். குற்றமற்ற என்னைச் சற்றேனும் தண்டிப்பது
உசிதம் அல்லவென்று உரைத்த இடையனைப்பார்த்து தயா
நிதியாகிய தேவேசர் ஓ, பிரோமனே! நான் கணக்கனாகிய
வசி அல்லேன். பிரோமலிங்கமே நீ இப்பொழுது படப்ப
டாதே. கதவைத் திறப்பாய் உனக்குச் சுவர்ணக் கலத்தில்
பால் அன்னம் கொண்டு வந்திருக்கின்றனன் என்று அத்தே
வேசன் உரைத்தலும் பிரோமன் விசனம் துக்கம் இரண்டை
யும் அடைந்து பிரோம புரீசரைக் கதவிடுக்கினால் பார்த்து
நிச்சயித்தும் கொஞ்சம் சந்தேகமுற்று நீர் பிரோமபுரீசரோயா
னால் கால் விலங்கு முறிபட்டுப் போகும் என்று உரைக்க
அவ்வாறே விலங்கு தெறிபட்டுப்போக அதுகாலை மானிட
உருவம் தரித்துப் பரமான்னத்தை ஏந்தி சந்திர கலையை
அணிந்த சடைக்கற்றையை உடையவரும், திருநீற்றினால்
திருமேனி வெளுத்தவரும் ஆதி முழு மதியை ஒத்து விள
ங்குகின்ற சிவபெருமானைச் சந்தோஷத்துடன் அஞ்சலித்து
வணங்கி அப்பரமான்னத்தை வணக்கத்துடன் பெற்றுப்பு
சித்துப் புத்திசாலியாகிய அவ்விடையன் பயம் நீங்கி அத்
தேவனை நோக்கி ஓ, சுவாமியே! இனிக்காலையில் கடூரபுத்
தியுடைய வசியானவன் திரவியத்தைக் கொடுவென்று நிர
பராதியாகிய என்னை அடிப்பானே என்செய்வேன் என்று
மனம் கலங்கிக் கூறிய பிரோமனைத் தயாநிதியும் தேவதேவே
சருமாகிய அப்புரோமபுரீசரும் ஓ, பிரோமா! காலையில் உன்னை
த்தண்டிக்கவரும் அவ்வசியைப்பார்த்து நான் ஒருசமயத்
தும் சிவதனத்தைச் சிறிதும் திருடவில்லை. அதற்குச் சாக்ஷி
பிரோமலிங்கமே உனக்கு அவ்வாறே அவரால் சொல்லிவி
க்கின்றேனா என்று சொல்லு. நானும் உனக்குச் சாக்ஷியா
கச் சொல்லுவேன். இது நிச்சயமே என்று கூறி அவன்
மனதைத் தேற்றி மறைந்தனர். பின்னர் நன்றாய் விடிந்த
காலையில் வசி என்பவன் சவுக்கைக் கையிலே கொண்டவ
னாகிச் சீக்கிரம் பிரோமனைக் கொணருங்கள் என்று வேலைக்
காரரை நோக்கிக் கூறலும் அவ்வாறே அவர்கள் பிரோமனை
பூட்டிய விலங்குடன் கலீர் கலீரென்று சத்திக்கும்படி

அழைத்துவர அவனைக் கோபத்துடன் தண்டிப்பிக்க எத்தனித்த வசியைப் பார்த்து அப்பொழுது பிரேமன் ஓ வசியே! என் விருதாவாக என்னைப் பீடிக்கின்றாய் பசுக்களுடைய பால், தயிர், நெய்யும் விலைப்படுத்தும் திரவியமும் எருதுகளின் கிரயத் திரவியமும் ஆகிய சிவசொத்தை ஒரு சமயத்திலும் கிஞ்சித்தும் நான் கிரகிக்கவில்லை. இவ்விஷயத்தில் அவ்வாறே பிரேம மகாலிங்கத்தை சாக்ஷியாகச் சொல்லுவிக்கின்றேன் என்று உரைத்தனன். அம்மொழி கேட்டு வசி என்பவன் நீ பிரேமலிங்கத்தை சாக்ஷி சொல்லுவிப்பாயானால் உன்னைத் தண்டிக்கவில்லை என்று பரிகசித்துரைத்து அவனைப் பிரேமலிங்கத்தின் சன்னிதிக்கு அழைத்து வந்தபின் பிரேமன் பயத்துடன் இருகரங்களையும் கூப்பிக்கொண்டு பிரேமலிங்கத்தை நோக்கி ஓ, பகவானாகிய பிரேமலிங்கமே! நீர் எல்லாவற்றிற்கும் சாக்ஷியாதலின் உமது பசுக்களின் பால் தயிர், நெய், முதலியவற்றைச் சிறிதும் கவரவில்லையென்று என்னுஞ்ரயை உண்மையென்று இச்சனக்கூட்டத்தில் தேவரீர் சாக்ஷியாக உரைத்தருளும் என்று கூறுங்கால் பிரேம வல்லபராகிய பகவான் இப்பிரேமன் என் திரவியத்தைச் சிறிதும் கவரவில்லை. இதற்கு நானே சாக்ஷி. ஆதலால் நீ இவனை விலங்கு தெறித்து விட்டுவிடு. கொஞ்சமும் வருத்தாதே வருத்தாதே என்று மயிர்க்கூச்சல் உண்டாகும்படி கெம்பீரமாக உரைத்தருளிய வசனத்தைக் கேட்டும் வசியானவன் நீ இந்திரஜாலவித்தை செய்கின்றாய் என்று ஓதி கிரபராதியான பிரேமனைத் தண்டிக்க, அதன் பின்னர் சூலியாகிய பிரேம மகாதேவன் கோபித்து அவ்வசியைத் தகிப்பதற்குத் தனது கையில் விளங்கும் மழுப்படையை விடுக்கச் சுவாலையோடும் பொறியோடும் புகையுடனே வருகின்ற அப்பாசுவைக் கண்டு பயந்து பலிபீடமானது தென்புறத்தில் போயிற்று. அதுசமயத்தில் அவ்வசி அம்மழுவனலினால் கணப்பொழுதில் சாம்பலாயினான். உடனே கருணாரசக்கடலாகிய பிரேமபுரேசர் தேவர்கள் துதிக்க ரிஷபாரூடராகத் தோன்றித் தமது பக்த

ஞகிய பிரேமனுக்குச் சாயுச்சியத்தை அளித்தனர். அத்த லத்தில் படலிபீடமானது இப்பொழுதும் தெனபாரிசத்திலே யே இருக்கின்றது. ஓ, முனிவரே! கேளுங்கள். லிங்கஉ ருவினரும், ஜகந்நாதருமாகிய இப்பிரேமேசர் இத்தலத்தில் பக்திமான்களுக்கு எல்லாச் சித்திகளையும் நேரில் வந்து அளிக்கின்றவராக விளங்குகின்றனர். ஒருவன் சகல தா னங்களையும் செய்து, பன்மகங்களையும் புரிந்து அடையும் புண்ணியத்தைப் பத்தியுடன் அவரைப் பூசிப்பதால் அடை கின்றனன். பஞ்சு மலைகளானது நெருப்புப் பொறியால் க்ஷணமே எப்படி நசிக்கின்றனவோ அவ்வாறே பிரேம லிங்கத்தை அர்ச்சிப்பவனுடைய பாவங்களும் நசிக்கின்ற ன. பிரேம புரேசர் தமது சன்னிதியில் காயத்திரி காவிரி நதிகளின் உயர்ந்த தரங்க திரைகளைச் சுவர்க்கப்படிகளை ப்போலச் செய்து விளங்குகின்றனர். ஸ்ரீமத் பிரேமபுரித் தலத்தில் எக்காலமும் நற்காலமே. அவ்வாறே எல்லா இட மும் நல்ல இடமே. எல்லாச் சனங்களும் தானபாத்திரமே. பூமியில் மனிதர்கள் பல்லாயிரம் ஜென்மங்களில் செய்த புண்ணிய வசத்தால் அத்தலத்தை அடைவார்கள். பாவ த்தால் கலங்கிய மனிதர்கட்கு அத்தலத்தில் சிரத்தை உண் டாகின்றதில்லை. உலோபிகளிடம் தானம் வாங்கல், சாத் திர விதியில்லாமல் ஜீவவதை செய்தல், பிறர்மனை நயத்தல் இம்மூன்றும் காயிக பாவங்கள். கொடுஞ்சொல் கூறல், பொய் மொழி பேசல், புறம் கூறல், எவ்விதத்திலும் பற்றி ல்லாப் பயனின்மொழி கூறல்; இவை நான்கும் வாசிக பாவ ங்கள். பரதனங்களை நினைத்தல், மனதினால் கேடு நினைத்தல், வீணாசைப் படுதல் இவை மூன்றும் மானத பாவங்கள். இவ் வாறு திரிகரணங்களால் உண்டாகும் தசவித பாவங்களைப் பத்துச் சென்மங்களில் புரிந்தாலும் அவன் பிரேம புரீச னைத் தரிசித்தால் அவைகளினின்றும் நீங்குகின்றான். சரீ ரம் நிலையற்றமையாலும் சம்பத்து அழிபத்தக்கமையாலும் மரணம் சமீபித்திருப்பதாலும் பிரேமலிங்கத்தைப் பூசியுங் கள். ஊதிக்கக்கூடாத இது போல் மரணமானது எவ்வள

வுகாலத்துள் எய்தவில்லையோ, அதற்குள்ளேயே பிரேமபுரி த்தலத்தில் விளங்கும் மகாலிங்கத்தை அடையுங்கள். சிலேட்டுமம் கண்டத்தில் கரகரவென்று கட்டிக்கொள்வதன் முன் பிரேமபுரியில் மகாலிங்கத்தை அடையுங்கள். ஓ, முனிவர்களே! பிரேம லிங்கத்தை அர்ச்சியாது சீவித்து வசிக்கின்றது தோல்துருத்தி உலையில் காற்றை வீசிச் சீவித்து வசிட்பதை ஒக்கும். இப்பூமியில் பிரேம லிங்கத்தை அர்ச்சியாது ஒருவன் சீவிப்பதும் மோகிப்பதும் பசுமாடுகள் சீவிப்பதும் மோகிப்பதும் போலாகும். அவ்வடபூமி நாதனைத் தரிசியாத கண்களும் அவரது மான்மியம் கேளாத காதுகளும் அவனைப் பூசியாத கைகளும் அவனை வணங்காத தலைகளும் பிரயோசனமற்றதுகள். ஆயுளும் பலவித த்தனமும் கஜத்தின் செவி நுனிபோலச் சஞ்சலமாதலின் உலகநாதனுகிய அச்சிவபெருமானை விரைவில் தன்னுலியன்ற மட்டும் உபாசிக்க வேண்டும். ஓ, அளர்க்க ராஜேந்திரனே! என்று பரத்துவாச முனிவர் சொல்லுகின்றனர். கேளும் முனிவர்களே! அத்தலத்தில் மகான்மாவாகிய ஓர் அந்தணர்க்கு விளைநிலம் கிரகம் முதலியவைகளை அளித்து அவனைப் பிரதிஷ்டை புரியும் பிரபாவத்தால் ஒருவனுக்குவுண்டாகும் பயனைச் சிறிது கூறுகிறேன். அவன் தாய் வமிசத்திலும், தந்தைகுலத்திலும் தனித்தனி எழுதலைமுறைகளையும், உத்தாரணஞ்செய்து தேகாந்தத்தில் சிவலோகத்தில் விளங்குகின்றான். அத்தலத்தில் ஒருவன் ஒரு செங்கலையெடுத்தடுக்கினுல் ஆங்கே மந்திரங்களுடன் செருடசயனம் செய்தவனுகின்றான். ஒருவன் ஆங்கு ஒரு சருங்கல்லை அடுக்கினுல் அவன் தங்கச்செங்கல்களால் நன்கு செய்யப்பட்ட அவ்வக்கினிசயனம் செய்தவனுகின்றான். எந்த மனிதன் அப்பிரேமலிங்கத்தைஅசங்கைநீராலாட்டி ஒருகூவிளந்தளிரால் அருச்சிப்பானே அவன் ஆயிரம் தங்கக்குடங்களிலெடுப்பித்த தீர்த்தங்களால் அபிஷேகஞ்செய்தவனும் அக்கினிசயனம் செய்தவனுமாகின்றான். ஒருவன் வீட்டினின்றும் பிரேமலிங்கத்தை உத்தேசித்து வெளிப்படு

வானேல் அவனது மூன்று ஜென்மங்களில் புரிந்த மிகு பாவம் நொடியில் நாசமாகும். ஓ, மறையவர் சிகாமணிகளே, ஒருவன் தூயவஸ்திரத்தினால், வடிகட்டிய தீர்த்தத்தினால் பிரேமலிங்கத்தை அபிஷேகம்செய்தால் அவன் இராஜசூய வேள்வியைச்செய்த பயனடைகின்றான் இதில் சந்தேகமே இல்லை. தானேயுண்டாகிவெகுகாலமாக நிச்சலராகி ஒளிர்கின்ற பிரேமலிங்கத்தை ஒருக்கால் புரியும் நமஸ்காரம் ஒன்றினாலே தேகியானவன் எல்லாப் பந்தங்களினின்றும் விடுபடுகின்றனன். எவன் அப்பிரேமலிங்கத்துக்குத் துஜாரோகணம் தொடங்கித் திருவிழாவைச் சைவ ஆகம விதிப்படி நன்றாகச் செய்விக்கின்றானோ அவன் இவ்வுலகத்தில் எல்லாவின்பங்களையும் புசித்துச் சக்கிரவர்த்தியாக ஜெனிக்கின்றான். இவரது மான்மியம் உரைப்பவரைத் தினந்தோறும் வெண்பட்டு சுவர்ணாபரணங்களினால் நன்றாய்ப்பூசித்துச்சிரத்தையுடன் கேட்கும் அரசன் நாடோறும் வெற்றி பொருந்தி மேலான ராஜ்யத்தையடைந்து இப்பூவில் எல்லாப் போகங்களையும் புசித்துப் பின்னர் சிவஸாயுச்சியம் அடைவான். எம்மனிதன் பிரேமலிங்க மான்மியத்தை எழுதித்தனது வீட்டில் வைத்துச் சிரத்தை, பத்திகளை உடையவனாகித் தினந்தோறும் அர்ச்சிக்கின்றானோ அவனுக்குச்சம்பத்து விருத்தி அடையும். கிரகபீடை நசிக்கும். அக்கினிபயம், சோரபயங்கள் அவனுக்குண்டாகாது. வியாதியாலுண்டாகும் பயம் கொஞ்சமும் இல்லை. அவன் தீர்க்காயுளையும் அடைகின்றான். ஓ, நைமிசமுனிவர்களே! இப்போது என்னால் சொல்லப்பட்ட இப்பிரேமலிங்கத்தின் இச்சரித்திரத்தை எவர்கள் கேட்கின்றனரோ எவர்கள் படிக்கின்றார்களோ அவர்கட்கு ஸ்ரீ சாம்பமூர்த்திமங்களத்தைச் செய்கின்றனர். இப்புராணத்தை கேட்போர்கள் திருவினருளையும், நின்மலமான வித்தையையும், சற்புத்திரரையும், அதிக போகங்களையும் அடைந்து அந்தத்தில் சிவபதவியையும் பெறுகின்றனர்கள். இக்கதையைக் கருப்பவதி கேட்கில் புத்திரனையும், பிரமசாரி கேட்கில், கன்

னிகையையும், அரசன் கேட்கில், அவன் சத்துருக்களைச் செயித்து மறுபடியும் மேலான இராச்சியத்தையும் பெறுவான். எம்மனிதன் மங்களத்தை அளிக்கிற சைவமகா புராணத்தில், க்ஷேத்திரகண்டத்தில், உருத்திரசங்கிதையில் சொல்லப்பட்ட பரிசுத்தமான வடதருமூலத்தில், எழுந்தருளிய சந்திரமவுலியினுடைய சரித்திரத்தை எழுதிப்பூசை புரிகின்ருனே அம்மனிதன் சிவபெருமானே யெனச் சூதமுனிவர் கூறினர். இப்படி மகான்மாக்களாகிய சௌனகாதி நைமிசமுனிவர்கள் சூதமுனிவருடைய முககமலத்திலிருந்து, பிரேமலிங்கமான்மியத்தைப்பத்தியுடன் கேட்டு அம்முனிவரை யருச்சித்தனர்கள். ஒருமுனிவர் அவருக்கு கமண்டலத்தையளித்தனர். மற்ருெருவர் கடிசூத்திரத்தை வ[illegible]ந்தனர். பின்னொருவர் ஆஸனத்தைக்கொடுத்தனர். மற்[illegible]ருருவர் மான்றோலை யீந்தனர். வேருெருவர் மரவுரியை [illegible]தவினர். பின்னொருவர் சந்தோஷத்துடன் ஆனந்தக்கண்ணீர் ததும்ப ஆலிங்கனமருளினர். பிறகொருவர் சுபத்தை அளிக்கின்ற பலவித ஆசிகள் ஈந்தனர். இவைகளைப் பெற்ற சூதமுனிவர் மனமகிழ்ந்து கூறுவாருயினர். மண்டலாதிபதியாகிய அளர்க்க ராசனும் சுத்தமான இக்கதையைப் பரத்துவாஜமுனிவர் முகத்திற்கேட்டு அவரைப் பொன்மலர்களால் அருச்சித்துத் திரும்பவும் சிவகதை கேட்பதில் மிக விருப்புடையவனுக விருந்தனன்.

சிவமகாபுராணத்தில் உருத்திர சங்கிதையில் க்ஷேத்திர கண்டத்தில் பிரேமபுரி மான்மியத்தில் இருபத்தைந்தாவது பிரமன் முத்தியடைந்தது அத்தியாயம்.

முற்றுப்பெற்றது

# அட்டவணை.